# தமிழ் இலக்கணமும் மொழிப் பயிற்சியும்

## எட்டாம் வகுப்பு



(திருத்தி அமைக்கப்பட்ட பாடத்திட்டத்தின்படி)




ஆசிரியர் :

**N. நஞ்சப்பா, M.A.,L.T.,**

தலைமையாசிரியர், மாவட்டக் கழக உயர்நிலைப்பள்ளி,
பாபிரெட்டிப்பட்டி.



பிரசுரகர்த்தர் :

**ராஜா ராம்சந்தர் & கம்பெனி,**

**520, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை—5.**

## முன்னுரை

இவ்விலக்கண நூல், அரசியலார் அண்மையில் திருத்தி அமைத்த பாடத்திட்டத்தையொட்டி எட்டாம் வகுப்பு மாணவர்க்கென எழுதப்பட்டது. பெரும்பாலும் மாணவர்க்குத் தெரிந்த எடுத்துக் காட்டுகளைக் கொண்டு இலக்கண விதிகள் வருவிக்கப்படுகின்றன; ஆதலால் மாணவர் இலக்கண நூலை விரும்பிக் கற்பர் என நம்புகின்றேன்.

மாணவர் இந்நூலைக் கற்றுப் பயன் பெறுவர்களாக. தமிழ்மொழி ஆசிரியரும், பிறரும் இதனைத் தம் பள்ளிகளில் பாடபுத்தகமாக அமைத்து என்னை மேலும் இப் பணியில் ஊக்குமாறு வேண்டுகின்றேன்.

இங்ஙனம்,

**ஆசிரியர்.**

# இலக்கணமும் மொழிப் பயிற்சியும்

## அரசியலாரால் வகுக்கப்பட்ட பாடத்திட்டம்

### எட்டாம் வகுப்பு

**1. எழுத்து**

1. எழுத்தும் வகையும்—சூத்திரம்.
2. முதல் எழுத்து — ,,
3. சார்பு எழுத்து — ,,
4. குற்றியலுகரம் } சூத்திரங்கள்
   குற்றியலிகரம் }
5. மாத்திரை—(விரிவாக)

**2. சொல்**

1. பதமாவது யாது?
2. ஓரெழுத்தொரு மொழி.
3. பகாப்பதம்—பகுபதம்.
4. பகுபத உறுப்புக்கள்—சூத்திரம்.
5. ஆகு பெயர்—சூத்திரம்.
6. தொழிற் பெயர் விகுதிகள் (விரிவாக):
7. பண்புப் பெயர் விகுதிகள்.
8. முதனிலைத் தொழிற் பெயர்.
9. முதனிலை திரிந்த தொழிற் பெயர்.
10. வினையாலணையும் பெயர்.
11. தொழிற் பெயர்க்கும் வினையாலணையும் பெயர்க்கும் வேறுபாடு.
12. வேற்றுமை (விரிவாக)—சூத்திரங்கள்.
13. வினைச் சொல்—இலக்கணம்
14. தெரிநிலை வினைமுற்று } சூத்திரங்கள்.
15. குறிப்பு வினைமுற்று }
16. செய்யும் என்னும் வினைமுற்று-சூத்திரம்.
17. இடைச் சொல்—இலக்கணம்.
18. ஏ, ஓ, கொல் இடைச் சொற்கள்-சூத்திரங்கள்.
19. உரிச் சொல்—இலக்கணம்.
20. ஒரு குணம் தழுவிய உரிச்சொல்-சூத்திரம்.
21. பல குணம் தழுவிய உரிச்சொல்-சூத்திரம்.

3. பொது

1. வழக்கு
2. இயல்புவழக்கு, தகுதிவழக்கு-சூத்திரங்கள்
3. தொகைநிலைத் தொடர்—சூத்திரம்.
4. தொகாநிலைத் தொடர்—சூத்திரங்கள்.

4. புணர்ச்சி

1. புணர்ச்சியாவது யாது?
2. இயல்பு, விகாரம் (தோன்றல், திரிதல், கெடுதல்).
3. மெய்யீற்றின்முன் உயிர் (பொது-சிறப்பு) சூத்திரங்கள்.
4. உடம்படு மெய்—சூத்திரம்.
5. உயிர் முன் வல்லினம்—சூத்திரம்.
6. குற்றியலுகரப் புணர்ச்சி, குற்றியலிகரப் [புணர்ச்சி.

5. யாப்பு

1. யாப்பின் உறுப்புக்கள்.
2. அசை, சீர்.

6. அணி

1. இயல்பு நவிற்சி
2. உயர்வு நவிற்சி
3. உவமையணி (பொது) உருவகம் (பொது)

## மொழிப் பயிற்சி

1. வாக்கியம்—பொது இலக்கணம் — தனி, தொடர், கலவை வாக்கியங்கள்.
2. வாக்கியப் பொருத்தம் — திணைப்பொருத்தம், எண் பொருத்தம், சிறப்புப் பொருத்தம் முதலியன.
3. எழுத்துப் பிழைகளும் திருத்தமும் (லகர, ளகர, ழகர, ரகர, றகரப் பிழைகளும் மற்ற பிழைகளும்).
4. வாக்கிய முடிவுப்பிழைகளும், திருத்தமும்.
5. வாக்கிய மாற்றம்.
6. நிறுத்தக் குறிகள் எல்லாம்.
7. வல்லெழுத்து மிகும் இடங்கள், மிகா இடங்களும்.

பொருளடக்கம்

# இலக்கணம்

## மொழிப் பயிற்சி

# இலக்கணம்

(எட்டாம் வகுப்பு)

## இலக்கணம் என்பது யாது?

ஒரு மொழியைப் பிழையின்றிப் பேசவும், எழுதவும் கற்பிக்கும் நூலுக்கு இலக்கணம் என்பது பெயர். உலகில் பல மொழிகள் பேசப்படுகின்றன. அவற்றுள் பழமைச் சிறப்புடைய மொழிகள் சிலவே. தமிழ் மொழி பழம் பெருஞ் சிறப்பினையுடைய மொழி.

நம் கருத்துக்களைப் பிறர்க்குத் தெரிவிக்கவும், பிறர் கருத்துக்களை நாம் அறியவும் கருவியாக இருப்பது மொழியாகும். தமிழ் மொழி பரந்த இலக்கணமுடையது. தமிழிலக்கணம் **எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி** என ஐந்து வகைப்படும்.

# 1. எழுத்து

## 1. எழுத்தும் வகையும்

எழுத்துக்களின் வகை, பிறப்பு ஆகியவற்றைக் கூறுவது எழுத்திலக்கணமாகும்; சொற்களின் தன்மையை விளக்குவது சொல்லிலக்கணம்; அறம், பொருள், இன்பம் ஆகிய பொருள்களைப் பற்றிக் கூறுவது பொருளிலக்கணம்; செய்யுளின் உறுப்பு, யாக்கும் முறை ஆகியவற்றை விவரிப்பது யாப்பிலக்கணமாகும்; (யாப்பு—செய்யுள்.) செய்யுளின் நயத்தை விளக்குவது அணியிலக்கணமாகும்.

**1. அன்பு** என்பது ஒருசொல்; இச்சொல் அ-ன்-ப்-உ என்ற நான்கு ஒலிகளால் ஆனது. இவ்வொலிகள் அன்பு என்னும் சொல்லுக்கு முதற்காரணமாய் அமைந் துள்ளன. எனவே **சொல்லுக்கு முதற்காரணமாய் உள்ள ஒலியே எழுத்தாகும்.** மக்கள் ஒருவரோடொரு வர் பேசும்போது எழுத்து ஒலிவடிவமாகவும், எழுதும் போது வரிவடிவமாகவும் அமைகின்றது. ஒலிவடிவம் செவிப்புலனால் உணரப்படுவது; வரிவடிவம் கட்புல னால் அறியப்படுவது.

தமிழ் மொழியிலுள்ள எழுத்துக்கள் **முத லெழுத்து, சார்பெழுத்து** என இருவகைப்படும்.

ந.சூ. 1. மொழி முதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்து முதல்சார் பெனவிரு வகைத்தே.

## 2. முதலெழுத்து-வகை

ஒரு மொழிக்கு இன்றியமையாதனவும், மற்ற எழுத்துக்கள் தோன்றுவதற்குக்காரணமானவையுமான எழுத்துக்கள் **முதலெழுத்து** எனப்படும்.

உயிர், மெய் என முதலெழுத்து இருவகைப்படும்.

### (1) உயிரெழுத்துக்கள் 12.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ—இப் பன்னிரண்டும் உயிரெழுத்துக்கள். இவை பிற எழுத் துக்களின் உதவியின்றித் தனித்து வழங்கும் ஆற்ற லுடைமையின் உயிரெழுத்துக்கள் என வழங்கப் பட்டன.

### உயிரெழுத்து—வகை

உயிரெழுத்துக்கள் குற்றெழுத்து, நெட்டெழுத்து என இருவகைப்படும். இவை குறில், நெடில் எனவும் வழங்கப்படும்.

அ-ஆ: இவற்றை உச்சரித்துப் பாருங்கள். அ-குறுகிய ஓசையுடையது; ஆ-அதனினும் நீண்ட ஓசையுடையது. அ-குறில்; ஆ-நெடில். குற்றெழுத்துக்கள் 5; அ, இ, உ, எ, ஒ, என்பன. நெட்டெழுத்துக்கள் 7; ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ, என்பன.

## (2) மெய்யெழுத்துக்கள் 18

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன். இவை தனித்து இயங்கும் ஆற்றல் இல்லாதவை. உயிர் எழுத்துக்களோடு சேர்ந்தே இவை ஒலிக்கும். உடல், உயிரோடு சேர்ந்தன்றி இயங்காதது போல், இவ்வெழுத்துக்கள் உயிர் எழுத்துக்களின் உதவி பெற்றே இயங்குவதனுல், இவை மெய்யெழுத்துக்கள் எனப்பட்டன. இவை தலையில் புள்ளியுடன் வழங்கும். (மெய்--உடல்).

### மெய்யெழுத்து—வகை.

மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் ஓசை வேறுபாட்டால் மூன்று வகைப்படும்.

### வல்லினம்

க், ச், ட், த், ப், ற்,— இவ் வாறு மெய்யெழுத்துக்களும் **வலிய** ஓசையுடைமையின் இவை **வல்லெழுத்**

**துக்கள்** என்று சொல்லப்படும். இவை **வல்லினம், வன்கணம்** எனவும் படும்.

மெல்லினம்

ங், ஞ், ண், ந், ம், ன்—இவ் வாறு மெய்யெழுத்துக் களும் மெல்லிய ஓசையுடையவை. இவை **மெல்லெழுத் துக்கள். இவை மெல்லினம், மென்கணம்** எனவும் படும்.

இடையினம்

ய், ர், ல், வ், ழ், ள்—இவ் வாறும் வல்லினம், மெல் லினம் ஆகிய இவற்றுக்கு இடைப்பட்ட ஓசையுடை யன; ஆதலால் இவை இடையெழுத்துக்கள் என வழங்கும். இவை **இடையினம், இடைக்கணம்** எனவும் கூறப்படும்.

ந சூ. 2. உயிரு முடம்புமா முப்பது முதலே.
3. அம்முத லீரா றுவி கம் முதல்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

(3) சுட்டெழுத்து

அவன், அவ்வீடு
இவன், இம்மரம்
உவன், உம்மனிதன்.

இச்சொற்களில் அ, இ, உ என்னும் உயிரெழுத் துக்கள் சொற்களின் முதலில் நின்று ஒரு பொருளைச் சுட்டிக்காட்ட வருதலின் இவை **சுட்டெழுத்துக்கள்** எனப்படும்.

அகரம்-தூரத்திலுள்ள பொருளையும், இகரம்-அருகிலுள்ள பொருளையும், உகரம்-மேலுள்ள பொருளையும் பின்னுள்ள பொருளையும் சுட்டிக் காட்ட வரும்.

அரசன், இலை, உடல்—இச்சொற்களில் வந்துள்ள அ, இ, உ ஒரு பொருளைச் சுட்டிக் காட்டாமையின் இவை சுட்டெழுத்துக்கள் ஆகா.

## (4) வினாவெழுத்துக்கள்

எவன், யார்?—எ, யா வினாப்பொருளில் வந்தன. அவனா, இவனோ?—ஆ, ஓ-வினாப் பொருளில் வந்தன. ஏன், அவனே?—ஏ-வினாப் பொருளில் வந்தது. எ, யா, ஆ, ஓ, ஏ ஆகிய இவ்வைந்து எழுத்துக்களும் வினாப் பொருளை உணர்த்தும்போது வினாவெழுத்துக்கள் என்று சொல்லப்படும்.

## 3. சார்பெழுத்து-வகை

தனித்து வழங்காமல் முதலெழுத்துக்களைச் சார்ந்து பிறக்கும் எழுத்துக்கள் சார்பெழுத்துக்களாம். (சார்பு-துணை).

**உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம், ஆய்தக் குறுக்கம்** எனச் சார்பெழுத்து பத்து வகைப்படும்.

ந. சூ. 4. உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இ உ ஐ ஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும்.

## (1) உயிர்மெய் யெழுத்து.

உயிரும், மெய்யும் கூடிப் பிறக்கும் எழுத்து **உயிர் மெய் யெழுத்தாகும்.**

க்+அ=க; க்+ஆ=கா; க்+இ=கி; க்+ஈ=கீ. 'க்' என்னும் மெய்யெழுத்தும், 'அ' என்னும் உயி ரெழுத்தும் கூடி 'க' என்னும் உயிர்மெய் யெழுத்துப் பிறந்தது. இவ்வாறு உயிர்மெய்யெழுத்தில் மெய்யொலி முன்னும், உயிரொலி பின்னும் இணைந்து வரும். க—புள்ளி இழந்தது; கா, கி முதலியன வடிவத்தில் மாறுதலும் பெற்றன.

மெய்-18; உயிர்-12 ஆதலின், ஒவ்வொரு மெய் யெழுத்துடனும், 12 உயிரும் இணைந்து வர, உயிர் மெய் யெழுத்துக்கள் $18 \times 12 = 216$ ஆகும்.

(தமிழ் நெடுங் கணக்கு — அடுத்த பக்கத்தில் காண்க.)

## (2) ஆய்தவெழுத்து.

இவ்வெழுத்து மூன்று புள்ளி வடிவினை யுடையது. ஃ—இவ்வாறு எழுதப்படும்.

அஃது [ஆய்தவெழுத்து உயிர்க் குறில்
எஃகு அல்லது உயிர்மெய்க் குறிலுக்கும்
பஃறுளி வல்லின உயிர்மெய்க்கும் இடையில்
அஃறிணை வரும்.]

# 4. குற்றியலுகரம், குற்றியலிகரம், மாத்திரை

## (1) குற்றியலுகரம்.

பட்டு—படு: இச்சொற்களில் வந்துள்ள உகரங் களின் ஒலி வேறுபாட்டைக் கவனியுங்கள். **படு**-என்ப திலுள்ள உகரம் தனக்குரிய ஒரு மாத்திரை ஒலியிற் குறையாது ஒலிக்கின்றது; ஆனால் **'பட்டு'** என்பதி

# தமிழ் நெடுங் கணக்கு

## உயிரெழுத்துக்கள்—12.

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |

## மெய்யெழுத்துக்கள்—18.

| | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | ங் | ச் | ஞ் | ட் | ண் | த் | ந் | ப் | ம் | ய் | ர் | ல் | வ் | ழ் | ள் | ற் | ன் |

## உயிர்மெய்யெழுத்துக்கள்—216.

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

லுள்ள உகரம் தன் மாத்திரையிற் குறைந்து ஒலிக்கின்றது. இங்ஙனம் தனக்குரிய ஒரு மாத்திரையளவிற் குறைந்து ஒலிக்கும் உகரம் **குற்றியலுகரம்** எனப்படும்.

நாடு — நெட்டெழுத்தைத் தொடர்ந்து வந்த குற்றியலுகரம்.

எஃகு — ஆய்தவெழுத்தைத் தொடர்ந்து வந்த குற்றியலுகரம்.

வரகு — உயிர்த் தொடர்க் குற்றியலுகரம்.

பாக்கு — வன்றொடர்க் குற்றியலுகரம்.

பஞ்சு — மென்றொடர்க் குற்றியலுகரம்.

மார்பு — இடைத்தொடர்க் குற்றியலுகரம்.

மேலே கொடுக்கப்பட்ட எடுத்துக் காட்டுகளைக் கவனித்தால் விளங்குவன :—

குற்றியலுகரம் நெடில், ஆய்தம், உயிர், வலி, மெலி, இடை ஆகிய எழுத்துக்களைத் தொடர்ந்து, வல்லின மெய்களின் மேலேறி, மொழியின் இறுதியிலேயே வரும்.

மொழி முதலிலும் இடையிலும் வரும் உகரமும் மெல்லின இடையின மெய்களின்மேல் ஏறிவரும் உகரமும், தனித்து வரும் உகரங்களும் தம் மாத்திரையிற் குறைந்து ஒலிக்காமையின் அவை **முற்றியலுகரங்கள்** எனப்படும்.

குடை, கடுவன், **னு**, **ரு**; இவை முற்றியலுகரங்கள்.

ந. சூ. 5. நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் ; பிறமேற் றொடரவும் பெறுமே.

## (2) குற்றியலிகரம்

நாகு+யாது = நாகியாது

எஃகு+யாது = எஃகியாது

வரகு+யாது = வரகியாது

இவ்வெடுத்துக் காட்டுகளினால் விளங்குவதென்ன? நாகு, எஃகு, வரகு-இவற்றில் வந்துள்ள உகரங்கள் குற்றியலுகரங்கள்; இவற்றின் முன் யகரம் வந்து புணர, இக்குற்றியலுகரங்கள் இகரமாகத் திரிந்து நின்றன. இவ்விகரம் **குற்றியலிகரம்** எனப்படும். தன் மாத்திரையிற் குறைந்து ஒலிக்கும் இகரம் **குற்றிய லிகரம்** ஆகும்.

கேண்மியா (கேள்), சென்மியா (செல்) என்னும் சொற்களில் இணைந்துள்ள **மியா** என்னும் அசைச் சொல்லில் உள்ள இகரமும் குற்றியலிகரமாகும்.

**சிறுமி**; **ஆழி**; **நுனி**; இச்சொற்களில் வந்துள்ள இகரங்கள் தமக்குரிய ஒரு மாத்திரையளவில் குறையா மையின் இவை **முற்றியலிகரங்களாம்**.

ந. சூ. 6 யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.

## (3) மாத்திரை

எழுத்துக்களை உச்சரிக்க ஆகும் கால அளவுக்கு மாத்திரை என்பது பெயர். இயல்பாக எழுகின்ற கண்ணிமைப் பொழுதும், கைந்நொடிப் பொழுதும் ஒரு மாத்திரையின் அளவாகும்.

## எழுத்துக்களுக்கு மாத்திரை

உயிரெழுத்துக்களில் குறில் ஒவ்வொன்றுக்கும் ஒரு மாத்திரை; நெடிலுக்குத் தனித்தனி மாத்திரை இரண்டு. மெய்யெழுத்துக்களுக்குத் தனித்தனி மாத்திரை அரை. உயிர்மெய்யெழுத்தின் மேல் ஏறிவரும் உயிரெழுத்தின் மாத்திரையே அவ் வுயிர்மெய்யெழுத்தின் மாத்திரையாகக் கொள்ளப்படும்.

க்+உ=கு. இவ்வுயிர்மெய் யெழுத்திற்கு மாத்திரை ஒன்று. அதாவது க் என்ற மெய்யெழுத்தோடு இணைந்து வரும் உயிரெழுத்தாகிய 'உ'வின் மாத்திரையே இவ்வுயிர்மெய் யெழுத்தின் மாத்திரையாகும்.

ஆய்த வெழுத்திற்கு மாத்திரை அரையாகும். குற்றியலுகரம், குற்றியலிகரம்—இவற்றிற்குத் தனித்தனி மாத்திரை அரை.

**உயிரளபெடைக்கு** மாத்திரை மூன்று—ஓஒதல்.

**ஒற்றளபெடைக்கு** மாத்திரை ஒன்று—கண்ண்.

**ஐகாரக் குறுக்கத்திற்கு** மாத்திரை ஒன்று—ஐயர்

**ஔகாரக் குறுக்கத்திற்கு** மாத்திரை ஒன்று—ஔவை.

**மகரக் குறுக்கத்திற்கு** மாத்திரை கால்—போன்ம்.

**ஆய்தக்குறுக்கத்திற்கு**மாத்திரை கால்-அஃறிணை.

இசையிலும், சேய்மையிலுள்ளவர்களை விளித்து அழைக்கும்போதும், பண்டமாற்றலிலும் மேலே கூறப்பட்ட மாத்திரையின் அளவு மிக்கு ஒலிக்கும். (பண்டமாற்றல்—பொருள்களின் விலைகளைக் கூறி விற்றல்.)

## வினாக்கள்

1. தமிழிலக்கணம் எத்தனை வகைப்படும்?

2. எழுத்தாவது யாது?

3. சார்பெழுத்தின் பிரிவுகளைக் கூறுக.

4. நாடு, அறிவு, பஞ்சு, எழு, கணு, மார்பு: குற்றியலுகரம் வந்துள்ள சொற்களை எடுத்துக்கூறு.

5. மாத்திரை என்றால் என்ன?

6. சால்பு, நுண்மை, பெற்றோர்: ஒவ்வொரு சொல்லுக்கும் மாத்திரைகளைக் கணக்கிடு.

7. உகரம் எவ்விடங்களில் குறுகி ஒலிக்கும்?

# 2. சொல்

## 1. பதமாவது யாது?

ஆ, ஈ, போ, தை, பூ: இவை தனித்தனி எழுத்துக்கள்; ஆயினும் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு பொருளைக் குறிக்க வந்தது.

(ஆ—பசு; போ—செல்)

நட, அரசு, பந்து, நண்பன்: இவை இரண்டு முதலாகப் பல வெழுத்துக்கள் தொடர்ந்து நின்று பொருள் தந்தன. **இவ்வாறு எழுத்துத் தனித்து நின்றும், இரண்டு முதலாகத் தொடர்ந்து நின்றும் பொருள் தரின் அது பதம் எனப் படும்.** பதம், சொல், மொழி, வார்த்தை என்பன ஒரே பொருளைக் குறிக்கும்.

## 2. ஓரெழுத்தொரு மொழி

ஆ, ஈ, வா, சீ, பை முதலியவை தனித்து நின்று பொருள் தருவதனால் இவை ஓரெழுத்தொரு மொழிகள் என்று வழங்கப்படும்.

ஓரெழுத்தொரு மொழிகள் சில வருமாறு:—

ஆ, ஈ, ஏ, ஐ, ஓ, ஔ.
மா, மீ, மூ, மே, மை, மோ.
தா, தீ, தூ, தே, தை.
பா, பூ, பே, பை, போ.
நா, நீ, நே, நை, நோ.

ஏ-அம்பு. ஐ-அழகு. ஓ-மதகு, நீர் தாங்கும் பலகை. மூ-மூப்பு. மே-மேம்பாடு. மோ-முகர். பே-நுரை. தூ-தூய்மை. நே-அன்பு. நை, நோ-வருந்து.

**குறிப்பு:** எழுத்துக்கள் தனித்தும், தொடர்ந்து நின்றும் பொருள் தராவிடின், அவை சொல் எனப் படா.

தொ, சித்ரை தி—இவை சொல் ஆகா.

## 3. பகாப்பதம்; பகுபதம்

நாடு, கூனன் : இச் சொற்களைக் கவனியுங்கள். **நாடு** என்னும் சொல்லைப் பகுக்க முடியாது; கூனன் என்னும் சொல்லைக் கூன் + அன் என்று பிரிக்கலாம். நாடு—பகாப்பதம். கூனன்—பகுபதம். எனவே சொற்கள் பகாப்பதம், பகுபதம் என்று இருவகைப்படும் என்பது தெரிகிறது.

வாழ்க என்னும் பகுபதம்—**வாழ்** என்னும் பகுதியும், **க** என்னும் விகுதியும் கொண்டது. செய்தான் என்னும் பகுபதம்—**செய்** யென்னும் பகுதியும், **த்** என்னும் இடை நிலையும், **ஆன்** என்னும் விகுதியும் கொண்டது. பிறவும் இவ்வாறே.

இவ்வாறு பகுபதங்களைப் பிரிக்கும் போது, சொல்லின் முதலில் நின்று பொருள்தரும் பாகம் **பகுதி** எனப் படும்; இறுதியில் நிற்கும் உறுப்பு **விகுதியாம்**; இடையில் நிற்கும் உறுப்பு **இடைநிலை** எனப்படும்; இடை நிலைக்கும் விகுதிக்கும் இடையில்வரும் உறுப்புச் **சாரியை** எனப்படும்; பகுதிக்கும் இடைநிலைக்கும்

## 4. பகுபத உறுப்புக்கள்

கீழ்வருவனவற்றைக் கவனியுங்கள் :

| சொல் | பகுதி | விகாரம் | சந்தி | இடைநிலை | சாரியை | விகுதி |
|---|---|---|---|---|---|---|
| வாழ்க | வாழ் | — | — | — | — | க |
| செய்தான் | செய் | — | — | த் | — | ஆன் |
| செய்தனன் | செய் | — | — | த் | அன் | அன் |
| படித்தனன் | படி | — | த் | த் | அன் | அன் |
| கண்டேன் | காண் | கண் | — | ட் | — | ஏன் |
| நடந்தனன் | நட | ந் | த் | த் | அன் | அன் |

இடையில் வரும் உறுப்புச் **சந்தி** எனப்படும்; பகுதி திரிந்து வருதல் **விகாரம்** ஆகும். **காண்** என்ற பகுதி கண் எனக் குறுகி நின்றது காண்க. சந்தி விகாரப்பட்டு வருதலும் விகாரமே. **நடந்தனன்** — என்பது **நட + த் + த் + அன் + அன்.** நட-பகுதி; அன்-விகுதி; த்-இடைநிலை; அன்-சாரியை; த்-சந்தி; த் என்னும் சந்தி, ந் ஆனது விகாரம்.

ந.சூ. 7. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்
களும்.

## 5. ஆகு பெயர்

**ஊர்** ஆற்றங்கரையில் அமைந்திருக்கிறது.

**ஊர்** அடங்கிற்று.

முதல் வாக்கியத்தில் ஊர் என்னும் சொல் ஓர் இடத்தின் இயற்பெயராக வந்தது. இரண்டாவது வாக்கியத்தில் ஊர் என்னும் சொல் அடங்கிற்று என்னும் வினையினால் அவ்வூரிலுள்ள மக்களைக் குறித்தது. இவ்வாறு முதற்பொருளின் பெயர், அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளுக்குப் பெயராகிப் பண்டைக்காலந் தொட்டுப் பெரியோரால் வழங்கப்பட்டு வருவன **ஆகுபெயர்** ஆகும்.

ஆகு பெயர்கள் பலவகைப்படும். அவற்றுள் சில:

### (1) பொருளாகு பெயர்

ஒரு வீசை **புளி** வாங்கி வா. புளி என்பது ஒரு மரத்தின் பெயர். ஒரு வீசை **புளி** என்பதில் **புளி**

என்பது அம்மரத்தின் பழத்தைக் குறிக்கிறது. இவ்வாறு ஒரு முதற் பொருளின் பெயர் அதன் உறுப்புக்கு ஆகிவருதல் **பொருளாகு பெயர்** அல்லது **முதலாகு பெயர்** என்று வழங்கப்படும்.

## (2) இடவாகு பெயர்

**நாடு பெயர்ந்தது :** நாடு என்பது இடத்தின் பெயர்; பெயர்ந்தது என்னும் வினையினால் இங்கு நாடு என்பது நாட்டு மக்களை உணர்த்திற்று. இவ்வாறு ஓர் இடத்தின் பெயர் அவ்விடத்திலுள்ள பொருளுக்கு ஆகி வருவது **இடவாகு பெயராம்.**

## (3) காலவாகு பெயர்

**கோடை விளைந்தது :** கோடையென்னும் காலத்தின் பெயர் அக்காலத்தில் விளையும் ஒரு பயிருக்கு ஆகி வந்தது. இவ்வாறு ஒரு காலத்தின் இயற்பெயர் அக்காலத்துடன் தொடர்புடைய மற்றொரு பொருளுக்கு ஆகிவருதல் **காலவாகு பெயராம்.**

## (4) சினையாகு பெயர்

**தலைக்கு** ஒரு பழம் கொடு. இங்கு தலை என்னும் சினைப் பெயர் ஆளைக் குறித்து நின்றது. இவ்வாறு ஓர் உறுப்பின் பெயர் அதன்முதற் பொருளுக்கு ஆகிவருவது **சினையாகு பெயராம்.**

## (5) பண்பாகு பெயர்

வீட்டிற்கு **வெள்ளை**யடித்தார்கள். இங்கு வெள்ளை என்னும் பண்புப் பெயர், அப்பண்பையுடைய சுண்ணம்

புக்கு ஆகி வந்தது. இங்ஙனம் ஒரு குணத்தின் பெயர் அதனுடன் தொடர்புடைய பொருளுக்கு ஆகி வருவது **பண்பாகு பெயராம்.** (பண்பு—குணம்).

## (6) தொழிலாகு பெயர்

**வற்றல் உண்டான்.** இங்கு வற்றல் என்னும் தொழிற் பெயர் (வற்றல்—வற்றுவது), அத்தொழிலை ஏற்ற பொருளுக்கு ஆகிவந்தது. இவ்வாறு ஒருதொழிலின் பெயர் அத்தொழிலை ஏற்ற பொருளுக்கு ஆகி வருவது **தொழிலாகு பெயர்** என்றும் வழங்கப்படும்.

## (7) அளவையாகு பெயர்

**படி** என்ன விலை? இங்குப் **படி** என்னும் முகத்தலளவைப் பெயர் அவ்வளவு கொண்ட தானியத்தைக் குறிப்பதால், இது **முகத்தலளவையாகு பெயராம்.**

**முழம்** நான்கணு—நீட்டலளவையாகு பெயர்.

ந.சூ. 8. பொருண்முத லாறோ டளவை சொல் தானி
கருவி காரியங் கருத்த னதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகுபெயரே.

# 6. தொழிற்பெயர் (விகுதிகள்)

சொற்கள், பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச் சொல், உரிச்சொல் என நான்கு வகைப்படும்.

மரம், ஊர், சித்திரை, கண், அன்பு, நடத்தல்—இவை பெயர்ச்சொற்கள்.

நடந்தான், சென்றேன், படி — இவை வினைச் சொற்கள்.

மற்று, ஏ, ஐ, ஆல் — இடைச்சொற்கள்.

சால, உறு, தவ, நனி — உரிச் சொற்கள்.

## தொழிற் பெயர்

நடத்தல், ஆட்டம், கல்வி, பார்வை, வரவு—இவை தொழிலுக்குப் பெயராய் வருதலின் **தொழிற்பெயர்** எனப்படும். தொழிற் பெயர் விகுதிகளாவன :—

தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, வு, தி, சி, வி, உள், காடு, பாடு, இல், அரவு, ஆனை, மை, து, ஆல், அடம், மதி, மானம் என்பனவும் பிறவுமாம்.

| | | | |
|---|---|---|---|
| படித்தல் | — தல் | கோட்பாடு | — பாடு |
| பாடல் | — அல் | எச்சில் | — இல் |
| ஆட்டம் | — அம் | தோற்றரவு | — அரவு |
| கொலை | — ஐ | வாரானை | — ஆனை |
| நடக்கை | — கை | செய்யாமை | — மை |
| பார்வை | — வை | பாய்த்து | — து |
| போக்கு | — கு | எழால் | — ஆல் |
| நடப்பு | — பு | கட்டடம் | — அடம் |
| வரவு | — வு | இறக்குமதி | — மதி |
| மறதி | — தி | வருமானம் | — மானம் |
| காட்சி | — சி | | |
| கல்வி | — வி | | |
| கடவுள் | — உள் | | |
| சாக்காடு | — காடு | | |

## 7. பண்புப்பெயர் (விகுதிகள்)

வெண்மை, நன்மை, பெருமை, நன்று, அன்பு முதலிய சொற்கள் குணத்திற்குப் பெயராக வருதலின் இவை குணப்பெயர் அல்லது பண்புப் பெயர்களாகும். மை, ஐ, சி, பு, இல், கு, றி, று, அம், நர், பம் — ஆகிய இவை பண்புப்பெயர் விகுதிகளாம்.

| | | | |
|---|---|---|---|
| செம்மை | — மை | நன்றி | — றி |
| தொல்லை | — ஐ | நன்று | — று |
| மாட்சி | — சி | நலம் | — அம் |
| மாண்பு | — பு | நன்னர் | — நர் |
| நெடில் | — இல் | ஒட்பம் | — பம் |
| நன்கு | — கு | | |

## 8. முதனிலைத் தொழிற்பெயர்

ஓர் **அடி** அடித்தான்—இங்கு **அடித்தல்** என்னும் தொழிற் பெயர் பகுதி (முதனிலை) மாத்திரமே நின்று அப்பொருளை உணர்த்திற்று. இவ்வாறு பகுதிமட்டும் நின்று தொழிலுக்குப் பெயராய் வரும் சொல்**முதனிலைத் தொழிற்பெயர்** என்று சொல்லப்படும்.

சொல், மொழி, உதை - என்னும் சொற்கள் சொல்லுதல், மொழிதல், உதைத்தல் என்னும் பொருளை உணர்த்தும்பொழுது இவை முதனிலைத் தொழிற் பெயர்களாம்.

## 9. முதனிலை திரிந்த தொழிற்பெயர்

கெடுதல்-என்பது தொழிற்பெயர். கெடு-பகுதி தல்-விகுதி. கெடு என்னும் பகுதி, **கேடு** என்று திரிந்து

நின்று கெடுதல் என்னும் பொருளை உணர்த்தும்போது, **முதனிலை திரிந்த தொழிற்பெயர்** என்று கூறப்படும்.

பிறர்க்குக் **கேடு** செய்யற்க. இங்குக் கேடு என்பது கெடுதல் என்னும் பொருளை உணர்த்தி நின்றது காண்க.

கோள், இடையீடு—இச்சொற்கள் கொள்ளுதல், இடையிடுதல் என்றபொருளைக் குறிப்பதால், இவையும் முதனிலை திரிந்த தொழிற் பெயர்களாம். முதனிலை எனினும் பகுதி எனினும் ஒன்றே.

## 10. வினையாலணையும் பெயர்

1. அவர் பல நூல்களைக் **கற்றார்.**

2. **கற்றோர்க்குச்** சென்றவிடமெல்லாம் சிறப்பு.

முதல் வாக்கியத்தில் கற்றார் என்னும் சொல் வினை முற்றாக வந்தது. இரண்டாவது வாக்கியத்தில் இச் சொல் பெயர்ச் சொல்லின் தன்மையை அடைந்து வேற்றுமையுருபை ஏற்று வந்தது. இவ்வாறு ஒரு வினை முற்று பெயர்ச் சொல்லின் தன்மையை அடைந்து வேற்றுமையுருபுகளை ஏற்று வருமாயின் அது **வினையாலணையும் பெயர்** என்று வழங்கப்படும்.

1. வீரன் போருக்குச் **சென்றான்.**

2. **சென்றான்** வெற்றியோடு மீண்டான்.

சென்றான்—சென்றவன் என்று பொருள் பட்டது ஆதலால் இஃது **வினையாலணையும் பெயராம்.**

## 11. தொழிற் பெயர்க்கும், வினையாலணையும் பெயர்க்கும் உள்ள வேறுபாடு.

| | தொழிற் பெயர் | வினையாலணையும் பெயர் |
|---|---|---|
| 1. | தொழிலுக்குப் பெயராக வரும். | அத் தொழிலை ஏற்ற பொருளின் பெயராக வரும். |
| 2. | படர்க்கை இடத்தில் மட்டும் வரும். | தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடங்களிலும் வரும். |
| 3. | பெரும்பாலும் காலங் காட்டாது. | காலங் காட்டும். |

### வினாக்கள்

1. பதமாவது யாது ?
2. ஓரெழுத்தொரு மொழிகள் சில கூறுக.
3. இறைவன், செய்தான், கண்ணன், ஓடு, மரம், கணக்கன்- பகாப்பதம், பகுபதம்இவைகளை எடுத்தெழுது.
4. பகுத உறுப்புக்கள் யாவை ?
5. சென்றேன், கூனன், நடந்தனன், கொடையாளன்— பகுபத உறுப்புகளைக் கூறு.
6. ஆகு பெயர் என்றால் என்ன ?
   சென்னை யடைந்தான், சென்னை திரண்டது, வெள்ளை உழுதது, தலையில் அணிந்தான், தலைக்கு நாலணா — இயற்பெயர், ஆகு பெயர்களை எடுத்தெழுது.
7. தொழிற்பெயர் விகுதிகள் சிலவற்றை உதாரணத்துடன் கூறு.
8. சில பண்புப் பெயர் விகுதிகளைக் கூறு.
9. முதனிலைத் தொழிற் பெயர், முதனிலை திரிந்த தொழிற் பெயர்—வேறுபாடென்ன?
10. வினையாலணையும் பெயர் — எடுத்துக்காட்டுடன் விளக்கு.

# 12. வேற்றுமை

**மரம்** என்பது பொருட் பெயர். **மரம் வளர்ந்தது** என்ற வாக்கியத்தில் வளர்ந்தது என்னும் பயனிலைக்கு எழுவாயாக வந்தது. பெயராக மட்டும் இருந்த சொல் வாக்கியத்தில் எழுவாயாகப் பொருள் வேறுபட்டது. இவ்வாறு பெயர்ச் சொல்லின் பொருள் வேறுபடுவது வேற்றுமையாம்.

எழுவாய் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்ரும் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆரும் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, விளி வேற்றுமை என வேற்றுமை எட்டாம்.

## வேற்றுமைப் பொருள் வகை

### (1) முதல் வேற்றுமை

ஒரு வாக்கியத்திலுள்ள எழுவாயே முதல் வேற்றுமையாம். இது எழுவாய் வேற்றுமை எனவும்படும். ஒரு பெயர் எவ்விதத் திரிபும் இன்றி வாக்கியத்தில் எழுவாயாகவரின், அது எழுவாய் வேற்றுமை ஆகும்.

செங்குட்டுவன் மலைவளம் காணச் **சென்ருன்.**

அவன் ஓர் சேர **அரசன்.**

நீதி நெறி தவருத அரசன் **யார் ?**

இவ்வெடுத்துக் காட்டுகளிலிருந்து எழுவாய் வேற்றுமை வினைச்சொல், பெயர்ச்சொல், வினு ஆகிய இவற்றைக்கொண்டு முடியும் எனத் தெரிகின்றது.

ந. சூ. 9. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ
ருய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே
வேற்றுமை.

10. பெயரே ஐ ஆல் கு இன் அதுகண்
விளியென் ருகு மவற்றின் பெயர்
முறை.

11. எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினக்கொள லதன்பய
னிலையே.

(2) இரண்டாம் வேற்றுமை

கொத்தன் வீட்டைக் கட்டினன் ... ஆக்குதல்
யானை காட்டை அழித்தது ... அழித்தல்
கோவலன் மதுரையை
அடைந்தான் ... அடைதல்
அவள் அழகில் இலக்குமியை
ஒத்தவள் ... ஒத்தல்
பாண்டியன் அரியணை நீங்கினன் ... நீத்தல்
சாத்தன் பொருளை உடையவன் ... உடைமை

இரண்டாம் வேற்றுமையின் உருபு ஐ என்பது; பொருள் செயப்படுபொருள். இது ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒத்தல், உடைமை என்னும் பொருள்களில் வரும்.

ந. சூ. 12. இரண்டா வதனுரு பையே யதன்
பொருள்
ஆக்க லழித்த லடைத னீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்,

(3) மூன்றும் வேற்றுமை

ஆடை நூலால் நெய்யப்பட்டது.
கோயில் தச்சனால் கட்டப்பட்டது.
தந்தையோடு மகன் சென்றான்.
அரசனுடன் அமைச்சன் சென்றான்.

இவற்றுள் நூல் என்பது கருவி. ஆடைக்கு நூல் கருவியாயிற்று. ஆல் உருபு சேர்ந்து கருவிப் பொருளை உணர்த்திற்று. தச்சன் கோயில் கட்டுவதற்குக் கருத்தா. ஆல் உருபு சேர்ந்து, தச்சனால் என்றாகிக் கருத்தாப் பொருளை யுணர்த்திற்று. தந்தையும் மகனும் சென்ற செயலும், அரசனும் அமைச்சனும் சென்ற செயலும் ஒன்றாக நிகழ்ந்தன. இவை உடனிகழ்ச்சி.

ஏவுதற் கருத்தா, இயற்றுதற் கருத்தா

1. அரசனால் கோயில் கட்டப்பட்டது.
2. தச்சனால் கோயில் கட்டப்பட்டது.

அரசனால் கோயில் கட்டப்பட்டது எனின் அரசன் பிறரை ஏவ, கோயில் கட்டப்பட்டது ; ஆதலால் அரசன் ஏவுதற்கருத்தா; தச்சனால் கட்டப்பட்டது எனின் தச்சனே கோயிலைக் கட்டியதால், அவன் இயற்றுதற் கருத்தா வாயினான்.

இவ்வாறு ஏவுதற் கருத்தா வென்றும், இயற்றுதற் கருத்தா வென்றும் கருத்தா இருவகைப்படும்.

முதற்கருவி, துணைக்கருவி

ஆடை நூலால் நெய்யப்பட்டது என்றவிடத்து நூலே ஆடையாக மாறுதலின், இது முதற்கருவி யாயிற்று. குழல் முதலியன துணைக்கருவியாம்.

மூன்றும் வேற்றுமையின் உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு, உடன் என்பன; இது கருவி, கருத்தா, உடனிகழ்ச்சி ஆகிய பொருள்களில் வரும்.

ந. சூ. 13. மூன்று வதனுரு பாலா னேடொடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்
பொருள்.

(4) நான்காம் வேற்றுமை

புலவர்க்குப் பரிசில் வழங்கினன் ... கொடை
பாம்புக்குப் பகை கீரி ... பகை
இராமனுக்கு நண்பன் குகன் ... நேர்ச்சி
அரசர்க்கு உரியது முடி ... தகவு
ஆடைக்கு நூல் ... அதுவாதல்
கூலிக்கு வேலை ... பொருட்டு
கோவலற்கு மனைவி கண்ணகி ... முறை

நான்காம் வேற்றுமை யுருபு 'கு' என்பது. இது கொடை, பகை, நேர்ச்சி, தகவு, அதுவாதல், பொருட்டு, முறை முதலிய பல பொருள்களில் வந்து பெயர்ப் பொருளை வேறுபடுத்தும்.

ந. சூ. 14. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடை பகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டு முறை யாதியி னிதற்கி
தெனல் பொருளே.

(5) ஐந்தாம் வேற்றுமை

வண்டியின் இறங்கினன் ... நீங்கல்
பாலின் வெண்மையானது
இத்தாள் ... ஒப்பு

ஊரின் வடக்கு மலை ... எல்லை

கொடையிற் பெரியவன்
குமணன் ... ஏது

இவ்வாறு ஐந்தாம் வேற்றுமையின் உருபுகளாகிய **இல், இன்** என்பன, **நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது** என்னும் பொருள்களில் வந்து பெயர்ப்பொருளை வேறு படுத்தும். **பாலின் வெண்மை இத்தாள்** என்றவிடத்து, இத்தாள் பாலைப் போல் வெண்மையானது என்று ஒப்புப் பொருளில் வருவதால் ஒப்பாயிற்று.

ந. சூ. 15. ஐந்தா வதனுரு பின்னு மில்லும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.

## (6) ஆறும் வேற்றுமை

எனது (என் + அது) கை ... தற்கிழமை

எனது வீடு ... பிறிதின் கிழமை

என கைகள்
தனது கை (செய்யுள்) } ... தற்கிழமை

ஆறும் வேற்றுமையின் உருபுகள் **அது, ஆது, அ** என்பன. பொருள் **கிழமைப் பொருள்** : (கிழமை— உரிமை). இது **தற்கிழமை, பிறிதின் கிழமை** என இருவகைப்படும். **எனது கை** — தற்கிழமை ; கை உடலினின்றும் பிரிக்கமுடியாதது. ஆதலின் தற்கிழமை எனப்பட்டது. வீடு—பிறிதின்கிழமை. இவ்வுருபுகளுள் அது ஒருமைப் பெயரைக் கொண்டும், அ—பன்மைப் பெயரைக் கொண்டும் முடியும். ஆது செய்யுளில் வரும்.

ந. சூ. 16. ஆறனுருபே யதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டம்
திரிபி னாக்க மாந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல்
பொருளே.

## (7) ஏழாம் வேற்றுமை

ஏழாம் வேற்றுமையின் உருபுகள்—இல், இடம், **கண், கால், தலை, வாய், உள்** முதலிய பலவாகும். இதன் பொருள் இடத்தைக் குறித்தல். பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற ஆறும் தற்கிழமைக்கும், பிறிதின் கிழமைக்கும் இடனாய் நிற்கும்.

| | **தற்கிழமை** | **பிறிதின்கிழமை** | |
|---|---|---|---|
| 1. | மணியின் கண் ஒளி | மரத்தின் கண் பறவை | —பொருள். |
| 2. | ஊரின் கண் வீடு | ஆகாயத்தில் பருந்து | —இடம். |
| 3. | நாளின் கண் நாழிகை | கார் காலத்தில் முல்லை | —காலம். |
| 4. | கையின் கண் விரல் | விரலின் கண் மோதிரம் | —சினை. |
| 5. | கறுப்பில் அழகு | இளமையில் வறுமை | —பண்பு. |
| 6. | ஆட்டத்தில் அபிநயம் | ஆட்டத்தில் பாட்டு | —தொழில். |

மணி-பொருள், ஒளிக்கு இடமாயிற்று: மணியையும், ஒளியையும் வேறு பிரிக்க முடியாமையின் தற்கிழமையாயிற்று. மரம்-பொருட்பெயர், பறவைக்கு இடமாயிற்று; இவற்றை வேறு பிரிக்க முடியுமாதலின் பிறிதின் கிழமையாயிற்று. கண், இல் முதலிய ஏழாம் வேற்றுமையுருபுகள் இடப்பொருளில் வந்தமை காண்க.

ந.சூ. 17. ஏழன் உருபு கண்ணாதி யாகும்
பொருண்முத லாறுமோரிரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொரு ளென்ப.

## (8) எட்டாம் வேற்றுமை

**தம்பீ வா.**

**சிறுவனே படி.**

**நண்பா கேள்.**

இவை **விளித்தல்** அல்லது அழைத்தற் பொருளைத் தருகின்றன. இவ்வாறு எட்டாம் வேற்றுமை பெயர்ப் பொருளை விளிப்பொருளாக வேறுபடுத்தும். ஆதலால் இது விளி வேற்றுமை எனவும் கூறப்படும்.

விளி, **அண்மை விளி** என்றும் **சேய்மை விளி** என்றும் இருவகைப்படும். அருகில் உள்ளவர்களை அழைப்பது அண்மை விளி; தொலைவில் உள்ளவர்களை விளிப்பது சேய்மை விளி.

தம்பி—அண்மை விளி.

தம்பீ—சேய்மை விளி.

பெயர்கள் விளிக்கப்படும் போது, அவற்றின் ஈறு குன்றியும், திரிந்தும், மிகுந்தும், இயல்பாயும் வரும்.

நண்பன்—நண்ப ... ஈறு கெட்டது.

தந்தை—தந்தாய் ... ஐ, ஆய் ஆயிற்று.

தம்பி—தம்பி ... இயல்பாயிற்று.

தம்பி—தம்பீ ... ஈறு நீண்டது.

நண்பன்—நண்பா ... ஈறு கெட்டு, ஈற்றயல் நீண்டது.

மக்கள்—மக்காள் ... ஈற்றயல் நீண்டது.

அன்பன்—அன்பனே ... ஈற்றில் ஏகாரம் மிகுந்தது.

ந.சூ. 18 எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
திரிபு குன்றன் மிகுத லியல்பயற்
றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே.

## வினுக்கள்

1. வேற்றுமை என்ருல் என்ன ?

2. வேற்றுமை எத்தனை வகைப்படும் ?

3. வீட்டின் கண், எனது, மலையின் வீழ் அருவி, மோதிரத்துக்குப் பொன்—வேற்றுமையுருபுகளை எடுத்துக் கூறு.

4. இரண்டாம் வேற்றுமை எவ்வெப் பொருள்களில் வரும் ?

5. முதல் வேற்றுமைக் கருத்தா, மூன்ரும் வேற்றுமைக் கருத்தா—இவைகளை விளக்கு.

6. தற்கிழமை, பிறிதின் கிழமை என்றால் என்ன ? வீட்டின் கண் விளக்கு, ஆட்டத்தில் நடிப்பு, நன்மையில் தீமை, மலையின் கண் அருவி—இவற்றை விளக்குக.

7. எட்டாம் வேற்றுமையில் இயற்பெயர் அடையும் சில மாறுதல்களை உதாரணங்களுடன் விளக்கு.

8. மக்கள்—இச்சொல் விளிவேற்றுமையில் எவ்வாறு வரும் ?

9. சேய்மை விளி, அண்மை விளி—விளக்கு.

10. நான்காம் வேற்றுமை—சூத்திரம் வரைக.

# 3. வினைச் சொல்

## 1. வினைச் சொல்—இலக்கணம்

**1. குழந்தை சிரிக்கிறது.**

**2. மரம் ஒடிந்தது.**

இவற்றில் குழந்தை, மரம் என்பவை பொருட்களின் பெயர்கள். சிரிக்கிறது, ஒடிந்தது—அப்பொருள்களின் தொழில்கள் அல்லது வினைகள்.

ஒரு பொருளின் தொழிலை உணர்த்துவது **வினைச் சொல்.** வினைச்சொல் காலங்காட்டும். சிரிக்கிறது—நிகழ்காலம் ; ஒடிந்தது—இறந்த காலம்.

**வினைமுற்று வகைகள்**

## 2. தெரிநிலை வினை முற்று

முருகன் **படித்தான்.**

சிறுவர் **விளையாடுகின்றனர்.**

நாளை மழை **பெய்யலாம்.**

இவற்றில் **படித்தான், விளையாடுகின்றனர், பெய்யலாம்** என்பன வினை முற்றுச்சொற்கள். இவ்வினைகள் காலத்தை வெளிப்படையாகக் காட்டுகின்றன அல்லவா ? படித்தான்—இறந்த காலம்; விளையாடுகின்றனர்—நிகழ் காலம்; பெய்யலாம்—எதிர் காலம். **இவ்வாறு காலத்தை வெளிப்படையாகக் காட்டும் வினைக்குத் தெரிநிலை வினை என்பது பெயர்.**

**ஓடினான், ஓடினாள், ஓடினார், ஓடிற்று, ஓடின—இறந்த காலம்.**

**ஓடுகிறான், ஓடுகிறாள், ஓடுகிறார், ஓடுகிறது, ஓடுகின்றன**—*நிகழ் காலம்.*

**ஓடுவான், ஓடுவாள், ஓடுவார், ஓடும்**—*எதிர் காலம்.*

*இவ்வாறு தெரிநிலை வினைமுற்று ஐம்பால்களிலும், இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலங்களையும் தெரிவிக்கும்.*

**முருகன் படித்தான்** : *படித்தான் என்னும் வினையினால் முருகன் என்னும் கருத்தாவும், புத்தகம் என்னும் கருவியும், வீடு என்னும் இடமும், படித்தலாகிய செயலும், இறந்த காலமும், பாடம் என்னும் செய்பொருளும் பெறப்படுகின்றன. இவ்வாறு ஒரு தெரிநிலை வினைமுற்று கருத்தா முதலிய பொருள்களை உணர்த்தி நிற்கும்.*

ந. சூ. *19.* *செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்*
*செய்பொரு ளாறுந் தருவது வினையே.*

## 3. குறிப்பு வினைமுற்று

**பொன்னன்** — *(பொன்னை யுடையவன்)* ... *பொருள்.*

**சேலத்தான்** — *(சேலத்தைச் சேர்ந்தவன்)* ... *இடம்.*

**கார்த்திகையான்**— *(கார்த்திகையில் பிறந்தவன்)* ... *காலம்.*

**மூக்கன்** — *(அழகிய மூக்கை உடையவன்)* ... *சினை.*

**கரியன்** — (கரிய நிறத்தை உடையவன்) ... பண்பு.

**செலவினன்** — (செலவை யுடையவன்) ... தொழில்.

இவ்வாறு பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் அறுவகைப் பெயரினடியாகப் பிறந்து காலத்தையும், தொழிலையும் குறிப்பாக உணர்த்தும் வினை, **குறிப்பு வினை** என்று சொல்லப்படும். இது **வினைக் குறிப்பு** என்றும் வழங்கப்படும். குறிப்பு வினையில் கருத்தா ஒன்று மட்டுமே வெளிப்படையாகத் தெரியும்.

**அவன் இப்பொழுது பொன்னன்** என்பதில் அவன் இப்பொழுது பொன்னையுடையனு யிருக்கிருன் என்று **குறிப்பாக** நிகழ் காலத்தை யுணர்த்தி நிற்பது காண்க. மேலும் **பொன்னன்** என்பது **பொன்னை யுடையனுயிருந்தான்** என்ருவது, **பொன்னையுடையனுய் இருக்கிருன்** என்ருவது, **பொன்னை யுடையனு யிருப்பான்** என்ருவது பொருள்படுமிடத்துக் குறிப்பு வினை என்று கொள்ளப்படும். அங்ஙனம் பொருள் படாத விடத்துப் பெயராகவே கொள்ளப்படும்.

ந. சூ. 20. பொருள்முத லாறினுந் தோற்றிமுன் ணறனுள்
வினைமுதன் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே.

## 4. செய்யும் என்னும் வினை முற்று

நடக்கும், பாயும்: இவ்வினைகள் **உம்** என்னும் விகுதியைப் பெற்றுள்ளன. இவ்வாறு **உம்** என்னும்

விகுதியை ஈற்றில் பெற்றுவரும் வினை முற்றிற்குச் **செய்யும்** என்னும் முற்று என்பது பெயர். அது படர்க்கை ஒன்றன் பாலிலும் பலவின் பாலிலும் வரும். படர்க்கைப் பலர்பாலிலும், முன்னிலை தன்மைகளிலும் வராது.

குதிரை **மேயும்** ... ஒன்றன் பால்.

குதிரைகள் **மேயும்** ... பலவின் பால்.

இவ்வினை முற்று **செய்யுளில்** ஆண்பால், பெண் பால்களிலும் வரும்.

1. தூண்டிய சினத்தினன் சொல்லெனச் **சொல்லும்**. சொல்லும்—(சாதுவன்)சொல்லுவான்.

2. தலைவி **வருந்தும்**. வருந்தும்—வருந்துவாள்.

இவற்றில் **செய்யும்** என்னும் முற்று எதிர் காலத்தைக் காட்டுவது காண்க. இம்முற்று, எதிர்கால மேயன்றி, **தன்மை, குறிப்பு, ஏற்பாடு** முதலிய பல பொருள்களிலும் வரும்.

தீ சுடும், மலை நிற்கும் ... தன்மை.

ஒருவேளை, நாளை கூட்டம் நடக்கும் ... குறிப்பு.

வகுப்பு காலை 10 மணிக்குத் தொடங்கும் ... ஏற்பாடு.

ந. சூ. 21. பல்லோர் படர்க்கை முன்னிலை
தன்மையிற்
செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.

## வினாக்கள்

1. வினைச் சொல் எத்தனை வகைப்படும்?
2. தெரிநிலைவினை எவ்வெவற்றைக் காட்டும்?
3. நடையன், கண்டேன், வருவான், நல்லன்—இருவகை வினைகளையும் எடுத்தெழுது.
4. செய்யும் வினைமுற்றுக்குச் சிலஉதாரணங்கள் கொடு.
5. இவ்வினைமுற்று எங்கெங்கு வராது?

# 4. இடைச் சொல்

## 1. இடைச் சொல்—இலக்கணம்

இடைச் சொல்லாவது—பெயர்ச் சொல், வினைச் சொற்களைப் போல் தனித்து வராமல், அவற்றைச் சார்ந்து நின்று பொருள் தருவது.

இமயமலையே உயர்ந்தது. இங்கு ஏகாரம் இமய மலை என்னும் பெயரைச் சார்ந்து நின்று பொருள் தருவது காண்க. மற்ற மலைகளினின்றும் பிரித்துக் கூறுவதால் **பிரிநிலைப் பொருளில்** வந்தது.

செய்தான்—என்பதில் செய்-பகுதி ; த்-இடைநிலை காலங் காட்டிற்று ; ஆன்-விகுதி படர்க்கை ஆண்பால் ஒருமையைக் காட்டிற்று.

த், ஆன்—இடைச் சொற்கள்.

வேற்றுமையுருபுகள், விகுதிகள், இடைநிலைகள் சாரியைகள், சுட்டெழுத்துக்கள், வினாவெழுத்துக்கள் ஆகியவையும், ஏ, ஓ, மற்று, கொல் முதலிய தத்தம் பொருளுணர்த்தும் சொற்களும் இடைச்சொற்களேயாம்.

## 2. தத்தம் பொருளுணர்த்தும் இடைச் சொற்கள்

(1) ஏகார இடைச் சொல்

1. மாணவரிற் கந்தனே முதற்பரிசு பெற்றான்.
   இதில் மாணவர் பலருள் கந்தனைப் பிரித்துக்

கூறுதலின் ஏகாரம் பிரிநிலைப் பொருளில் வந்தது.

2. **நீயே** கொண்டாய்? என்பது நீயோ கொண்டாய் என்று பொருள்படும் போது, ஏகாரம் வினாப் பொருளது.

3. **நிலனே, நீரே, தீயே,** காற்றே என்பதில் நிலனும் நீரும் தீயும் காற்றும் என்று எண்ணுப் பொருள்படுதலின் ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தது.

4. இயம்புவன் எழுத்தே. இதில் ஏகாரம் வேறு பொருளின்றி நிற்றலால் அசை; ஈற்றில் வருதலின் ஈற்றசை எனப்பட்டது.

5. **நன்மையே** வெல்லும் என்பதில் நன்மையினது உறுதியைத் தெளிவுபடுத்திக் கூறுவதனால் ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது.

6. **ஏயே** இவளொருத்தி பேடியோ வென்றார் என்பதில் ஏகாரம் வேறு பொருளைக் குறிக்காமல் (செய்யுளில்) இசையை நிறைக்க வந்தமையின் இசைநிறைப் பொருளினை யுடையதாயிற்று.

எனவே **ஏ** என்னும் இடைச் சொல் **பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம், இசைநிறை** என்னும் ஆறு பொருள்களில் வரும்.

ந. சூ 22. பிரிநிலை வினாவெண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே.

(2) 'ஓ' என்னும் இடைச் சொல்

1. தூங்கவோ வந்தாய்?—என்பதில் ஓகாரம்— தூங்குவதற்கு அன்று, வேலை செய்வதற்கு வந்தாய் என்னும் ஒழிந்த சொற்களைத் தருதலின் **ஒழியிசை.**

2. அவன் வந்தானோ?—இங்கு ஓகாரம் கேள்விப் பொருளைத் தருதலால் **வினு.**

3. (i) ஓ, ஓ பெரியன் — என்பதில் ஓகாரம் பெருமையைக் குறித்தலின் **உயர்வு சிறப்பு.**

(ii) ஓ, ஓ கொடியன் — என்பதில் ஓகாரம் கொடுமையை உணர்த்துவதனுல் **இழிவு சிறப்பு.**

4. செழியன் செங்கோல் தவறுமோ—என்பதில் செங்கோல் தவருது என்று எதிர்மறைப் பொருளைத் தருவதால் **எதிர் மறை.**

5. ஆணோ அதுவும் அன்று; பெண்ணோ அதுவும் அன்று என்பதில் ஆணும் அன்று, பெண்ணும் அன்று, **அலி** என்று தெரிய நிற்றலின் ஓகாரம் **தெரிநிலைப்** பொருளில் வந்தது.

6. ஓ ஓ கெட்டொழிந்தானே என்பதில் ஓகாரம் கழிந்ததற்கு இரங்குவதாகப் பொருள் தருதலால் **கழிவு.**

7. நடுநாள் வாரல் வாழி**யோ** வருந்துதும் யாமே என்பதில் ஓகாரம் வேறு பொருளின்றி

நிற்றலால் **அசைநிலையாயிற்று**. (வாழியோ-வாழி.)

8. அவர்களில் இவனோ வென்றான் என்பதில் பலருள் ஒருவனைப் பிரித்துக் காட்டுவதால் ஓகாரம் **பிரிநிலைப்** பொருளதாயிற்று.

எனவே ஓகார இடைச்சொல் **ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, கழிவு, அசைநிலை, பிரிநிலை** என்னும் எட்டுப் பொருள்களில் வரும் என அறிக.

ந. சூ. 23. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட்
டோவே.

## (3) 'கொல்' என்னும் இடைச்சொல்

1. குற்றி **கொல்லோ ?** மகன் **கொல்லோ ?** என்பதில் கொல் என்பது குற்றியோ மகனோ என்ற ஐயப் பொருளை உணர்த்துவதால் **ஐயப்** பொருளது.

2. கற்றதனால் ஆய பயன் என் **கொல்** என்பதில் கொல் என்பது பொருளின்றி நிற்றலால் அசை நிலையாயிற்று.

ந. சூ. 24. கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.

## வினாக்கள்

1. இடைச் சொல்லின் இலக்கணம் யாது?

2. இடைச் சொற்கள் எவற்றைச் சார்ந்து வரும்?

3. வீட்டை, வருவான், அவனே, யாரோ—இடைச் சொற்களை எடுத்துக் கூறு.

4. தத்தம் பொருளுணர்த்தும் சில இடைச்சொற்களைக் கூறு.

5. அவனே செய்தான்? யானோ அரசன், மற்றறிவாம்—இடைச் சொற்களின் பொருளைக் கூறு.

# 5. உரிச் சொல்

## 1. உரிச்சொல்—இலக்கணம்

உரிச்சொல்லாவது—பெயர், வினைச் சொற்களைச் சார்ந்து, அவற்றின் பண்பை உணர்த்தி வரும் சொல்லாம்.

சாலப் பேசினான். சால—உரிச்சொல்.

**உரிச்சொல் வகை**

சில உரிச்சொற்கள் ஒரே பொருளைக் குறித்து வரும். அவை **ஒரு குணம் தழுவிய உரிச்சொற்கள்** ஆகும். சில உரிச்சொற்கள் பல பொருளைக் குறிக்கும். அவை **பல குணம் தழுவிய உரிச்சொற்கள்** ஆகும்.

## 2. ஒரு பொருள் குறித்த பல சொற்கள்

**சால**வும் நன்று
**உறு** தவம்
'**தவ**ச் சேய் நாட்டா ராயினும்'
**நனி** பேதை
களி **கூர்** நெஞ்சம்
**கழி** கண்ணோட்டம்

இவ்வாறு **சால, உறு, தவ, நனி, கூர், கழி** என்னும் உரிச்சொற்கள் **மிகுதி** என்னும் ஒரே பொருளை உணர்த்தி நிற்பதனால், இவை ஒரு குணந்தழுவிய பல **உரிச்சொற்கள்** ஆகும்.

ந.சூ. 25. சால உறுதவ நனிகூர் கழிமிகல்.

## 3. பல பொருள் குறித்த ஒரு சொல்

| | |
|---|---|
| கடி நகர்—காவல் | கடுங்காற்று—மிகுதி |
| கடி வாள்—கூர்மை | கடி மணம்—புதுமை |
| கடி மலர்—விரை | கடி முரசு—ஆர்த்தல் |
| கடி மார்பன்—விளக்கம் | கடி மது—வரைவு (நீக்கல்) |
| கடி யாமம்—அச்சம் | கடி வினை—மன்றல் |
| கடி யரண்—சிறப்பு | கடி மிளகு—கரிப்பு |
| கடி விடுதும்—விரைவு. | (காரம்) |

இவ்வாறு **'கடி'** என்னும் உரிச்சொல் பலபொருள்களை உணர்த்தி வருதலின், இது பல பொருள் குறித்த ஒரு உரிச்சொல்லாகும்.

ந.சூ. 26. கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்க மச்சஞ் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை யாப்பு
வரைவே மன்றல் கரிப்பி னாகும்.

### வினாக்கள்

1. உரிச்சொல்லாவது யாது ?
2. சில உரிச்சொற்களைக் கூறு.
3. ஒரு பொருள் குறித்த சில உரிச்சொற்களை எழுது.
4. 'கடி' என்னும் உரிச்சொல் எவ்வெப் பொருள்களில் வரும் ?
5. **சால** உழைத்தான், **கடி**யரண் : உரிச்சொற்கள் எவ்வெப்பொருளில் வந்தன ?

# 6. பொது

## 1. வழக்கு

வழக்கு என்பது சொற்கள் வழங்கும் முறையாகும். (வழக்கு—வழக்கம், சொல் நடை). அஃது **இயல்பு வழக்கு, தகுதி வழக்கு** என இருவகைப்படும்.

## 2. இயல்பு வழக்கு, தகுதி வழக்கு

**(i) இயல்பு வழக்கு:** ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்த சொல்லால் அப்பொருளைக் கூறுவது இயல்பு வழக்காம். அஃது **இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ** என மூவகைப்படும்.

(1) இலக்கணமுடையது

**நிலம், நீர், தீ, பொன்னன், நன்னிலம்**—இச்சொற்கள் இலக்கண அமைதியோடு வந்துள்ளனவாதலால், இலக்கணமுடையனவாகும்.

(2) இலக்கணப் போலி

**முன்றில்**
**புறநகர்**
**வாய்க்கால்**
} ஆகிய சொற்கள் முறையே **இல்முன், நகர்ப்புறம், கால்வாய்** என்று வரப்பெறுவதே இலக்கணமரபாகும். மாறுபட்டு வருவது இலக்கண மரபன்றாயினும், இலக்கணமுடையதுபோல் சான்றோரால் தொன்றுதொட்டு வழங்கப்பட்டு வருவதால் இலக்கணப்போலி எனப்படும்.

(3) மரூஉ

தஞ்சாவூர்—தஞ்சை
ஆயிற்று—ஆச்சு
பொழுது—போது
வாயில்—வாசல்
} முன் வரிசையிற் குறித்த சொற்கள் இரண்டாவது வரிசையில் குறித்துள்ளவை போல், எழுத்துக்

கள் தோன்றியும், திரிந்தும், கெட்டும், தாமே மருவித் தொன்றுதொட்டு வழங்கி வருவன மரூஉ எனப்படும்.

**(ii) தகுதி வழக்கு:** ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்த சொல்லை ஏதேனும் காரணம் பற்றி நீக்கிவிட்டுத் தகுந்த வேறு சொல்லால் அப்பொருளைக் கூறுவது **தகுதி வழக்காம்.** அஃதும் **இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி** என மூவகைப்படும்.

(1) இடக்கரடக்கல்

மலங் கழுவி வந்தான்—என்பதைக் கால் கழுவி வந்தான் என்றும்,

—பீ—என்பதைப் பவ்வீ, பகர ஈகாரம் என்றும், இது போல் நன் மக்களிடத்துச் சொல்லத் தகாத வார்த்தைகளை மறைத்து வேறுவகையால் வழங்குவது இடக்கரடக்கல் எனப்படும். (இடக்கர்-சொல்லத் தகாதது, இழி சொல். அடக்கல்-மறைத்துக் கூறல். இடக்கு-இடக்கர்) இதனை **மறைமொழிகிளவி** என்றுங் கூறுவர்.

(2) மங்கலம்

| **அமங்கலம்** | **மங்கலம்** |
|---|---|
| செத்தார் | துஞ்சினர் |
| தாலி யறுந்தது | தாலி பெருகிற்று |
| சுடு காடு | நன்காடு |
| ஓலை | திரு முகம் |
| பொய்யாகிய உடல் | மெய் |
| கா ராடு | வெள்ளாடு |

இவைகளைப் போல அமங்கலமான சொல்லை ஒழித்து மங்கலமான சொல்லால் வழங்குவது மங்கலம் எனப்படும். [மங்கலம்—சுபம் ; நன்மை].

### (3) குழூஉக் குறி

பறி=பொன்—தட்டார் கூறுவது.

சொல் விளம்பி=சள்—வேடர் கூறுவது.

மதி வெள்ளை =ஒரு ரூபாய்—வர்த்தகர் கூறுவது.

கறுப்பு=சாராயம்—குடியர் கூறுவது.

என்பது போல ஒரு கூட்டத்தார் ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்த சொல்லை ஒழித்துப் பிறர் அறியாத படி, தமக்குள் மாத்திரம் பொருள் விளங்குமாறு, அப் பொருளை வேறொரு சொற்குறியால் வழங்குவது குழூ உக்குறி எனப்படும். [குழூஉ—கூட்டம். குறி—அடையாளம்].

ந. சூ. 27. இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉ என் றுரும் மூவகை இயல்பும்
இடக்க ரடக்கல் மங்கலம் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

## 3. தொகை நிலைத்தொடர்

**தொகை நிலைத் தொடர்** என்பது நிலைமொழி வருமொழிகளின் இடையே உருபு மறைந்தும், ஒரு மொழித் தன்மைப்பட்டும், சொற்கள் பிளவு படாமல் தொடர்ந்து நிற்பதாம்.

அஃது வினைத்தொகை, பண்புத் தொகை, உவமைத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை, வேற்றுமைத்தொகை நிலைத் தொடர் என ஆறு வகைப்படும்.

(1) வினைத் தொகை

பாய் புலி, அழிபொருள், தோய் தயிர், வரு பொருள். இவைகளைப் போல் காலங் காட்டும் இடை நிலையும், பெயரெச்ச விகுதியும், மறைந்து, வினைப் பகுதி மாத்திரம் நின்று பெயரைக் கொண்டு முடிவது வினைத் தொகையாம். பாய் புலி என்பது பாய்ந்த புலி, பாய்கின்ற புலி, பாயும் புலி என முக்காலத்திலும் விரியும்.

(2) பண்புத் தொகை

செம்மலர், கருங் குதிரை, சிற்றூர், பாசடை இவைகளைப்போல் பண்புப் பகுதிக்கும் பண்பு கொள் பெயருக்கும் இடையில் **ஆகிய** என்னும் பண்புருபு மறைந்து வருவது பண்புத் தொகையாம். (பண்பு—குணம்).

செம்மலர்—செம்மையாகிய மலர் என விரியும். பிறவும் இது போல்.

சாரைப் பாம்பு, பனைமரம்.

(சாரை, பனை சிறப்புப் பெயர்; பாம்பு, மரம்-பொதுப் பெயர்) இவை முறையே சாரையாகிய பாம்பு பனையாகிய மரம் என விரியும்.

இவைபோல் சிறப்புப் பெயருக்கும் பொதுப் பெயருக்கும் இடையில் **ஆகிய** என்னும் பண்புருபு மறைந்து

வருமாயின், அஃது இரு பெயரொட்டுப் பண்புத் தொகை எனப்படும்.

(3) உவமைத் தொகை

பவளவாய் — பவளம் போன்ற வாய்
மதிமுகம் — மதிபோன்ற முகம்

இவைகளைப் போல் உவமானத்திற்கும், உவமேயத்திற்கும் இடையில் **போல, போன்ற** முதலிய உவம உருபுகள் மறைந்து வருவது உவமைத் தொகையாம்.

(4) உம்மைத் தொகை

கபிலபரணர் — கபிலரும், பரணரும்
கட்டை முளைவேர் — கட்டையும், முளையும், வேரும்
கவச குண்டலம் — கவசமும், குண்டலமும்
இராப் பகல் — இரவும், பகலும்

இவைகளைப் போல் நிலை மொழி வருமொழி இரண்டிலும் **உம்** என்னும் இடைச்சொல் மறைந்து வருவது உம்மைத் தொகையாம்.

(5) அன்மொழித் தொகை

பூங்குழல் வந்தாள் — இது பூவையுடைய குழலினை யுடையாள் வந்தாள் என விரியும். இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

தாழ்குழல் வந்தாள் — இது தாழ்ந்த குழலினையுடையாள் வந்தாள் என விரியும். இது வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித் தொகை.

ஆண்டகை கூறினான் — இஃது ஆண்மையாகிய தகுதியை உடையான் கூறினான் என விரியும். இது பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

துடியிடை வந்தாள் — இஃது துடிபோலும் இடையை யுடையாள் வந்தாள் என விரியும். இது உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாம்.

உயிர் மெய் இது — இஃது உயிரும் மெய்யும் கூடிப் பிறந்த எழுத்து இது என விரியும். இது உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

மேற்காட்டிய உதாரணங்களைப் போல, வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத் தொகைகளின் புறத்து வேறு சொல் மறைந்து வருவது **அன்மொழித் தொகையாம்.** (அல்லாத மொழி தொக்கு நிற்பது அன்மொழித் தொகையாம்.)

அன்மொழித் தொகையின் பெயர் கூறும் பொழுது அது தோன்றிய தொகையின் பெயரை முன்னர் வைத்துக் கூறுவது மரபு.

## (6) வேற்றுமைத் தொகை நிலைத்தொடர்

**பாடம் படித்தான்** என்பது பாடத்தைப் படித்தான் என்று விரியும். இரண்டாம் வேற்றுமை யுருபாகிய **ஐ** தொக்கி நின்றது. எனவே **பாடம் படித்தான்** என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத் தொடராம்.

**தலை வணங்கினான்**—இஃது தலையால் வணங்கினான் என்று விரியும். தலையென்னும் சொல்லுக்கும், **வணங்கினான்** என்னும் சொல்லுக்கும் இடையில் **ஆல்** என்னும் மூன்றும் வேற்றுமை யுருபு தொக்கி நின்றதால் இது **மூன்றும் வேற்றுமைத் தொகை** அல்லது தொகைநிலைத் தொடர் எனப்படும்.

**காடு சென்றான்**—இது காட்டுக்குச் சென்றான் என்று விரியும். இடையில் நான்கன் உருபாகிய **கு** தொக்கி நின்றதால் இது **நான்காம் வேற்றுமைத் தொகை** எனப்படும்.

**மலைவீழ் அருவி**—இது மலையின்வீழ் அருவி என்று விரியும். இடையில் ஐந்தாம் வேற்றுமையின் உருபு **இன்** தொக்கி நின்றது. இது ஐந்தாம் வேற்றுமைத் தொகை அல்லது **ஐந்தாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர்** எனப்படும்.

**என் வீடு**—இது எனது வீடு விரியும். இடையில் **ஆறும்** வேற்றுமையுருபு **அது** தொக்கி நிற்பதால் இத்

தொடர், **ஆரும் வேற்றுமைத் தொகை** அல்லது ஆரும் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர் என்று வழங்கப்படும்.

**பல்வலி**—இஃது பல்லின் **கண்** வலி என விரியும். **கண்**-ஏழனுருபு தொக்கிநின்றது. எனவே இது **ஏழாம் வேற்றுமைத் தொகையாகும்.** இஃது ஏழாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர் எனவும் படும்.

இவ்வாறு வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்கள் ஆறுதல் காண்க.

**உருபும் பயனும் உடன் தொக்கதொகை**

**பாற்குடம்**—இஃது பாலையுடைய குடம் என்று விரியும். பால், குடம் ஆகிய சொற்களுக்கிடையில் இரண்டாம் வேற்றுமை உருபாகிய **ஐ**யும், அவ்வுருபின் பொருளாக உள்ள **பயனும்** அவ்வுருபுடன் தொக்கி நிற்றலால், இத்தொடர் **இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை** எனப்படும்.

இவ்வாறு உருபும் பயனும் உடன் தொக்கதொகை இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை ஈறாக ஆறு வகைப்படும்.

ந. சூ. 28. பெயரொடு பெயரும் வினையும்
வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை
ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்
தொரு
மொழிபோ னடப்பன தொகைநிலைத்
தொடர்மொழி.

29\. வேற்றுமை வினைபண் புவமை யும்மை
அன்மொழி யெனவத் தொகையா
றாகும்.

40\. இரண்டு முதலா மிடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத்
தொகையே.

## 4. தொகாநிலைத்தொடர்

**தொகாநிலைத்தொடர்** என்பது நிலைமொழி வருமொழிகளின் இடையே உருபு மறையாமலும், ஒருமொழித்தன்மைப் படாமலும் சொற்கள் பொருட்பொருத்த முறத் தொடர்ந்து நிற்பதாம்.

இது **வேற்றுமைத் தொகாநிலைத்தொடர், அல்வழி தொகாநிலைத்தொடர்** என இருவகைப்படும்.

**வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்** என்பது இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை ஈறாக ஆறுவகைப்படும்.

**அல்வழித் தொகா நிலைத்தொடர்** என்பது எழுவாய்த்தொடர், விளித்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத் தொடர், தெரிநிலை வினைமுற்றுத்தொடர், குறிப்புவினை முற்றுத் தொடர், இடைச்சொற்றொடர் உரிச்சொற்றொடர், அடுக்குத்தொடர் என ஒன்பது வகைப்படும்.

### (1) வேற்றுமைத் தொடர்நிலைத் தொடர்

**வேலை எறிந்தான்**—வேல் எறிந்தான் என்னும் இருசொற்களுக்கும் இடையில் இரண்டாம் வேற்றுமை உருபாகிய **ஐ** என்பது வெளிப்பட்டு வருதலின் இத்

தொடர் இரண்டாம் வேற்றுமைத் தொகா நிலைத் தொடர் அல்லது இரண்டாம் வேற்றுமை விரி எனப் படும்.

**கல்லால் அடித்தான்**—ஆல் என்னும் மூன்ரும் வேற்றுமையுருபு வெளிப்பட்டு வருதலின் இத்தொடர் மூன்ரும் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் அல்லது மூன்ரும் வேற்றுமை விரி என்று சொல்லப்படும்.

**ஊருக்குச் சென்ருன்**—கு என்னும் நான்காம் வேற்றுமையுருபு விரிந்து நிற்றலின் இத்தொடர் நான்காம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் அல்லது நான்காம் வேற்றுமை விரி எனப்படும்.

**மலையின் வீழ் அருவி**—இரு சொற்களுக்கும் இடையில் **இன்** என்னும் ஐந்தாம் வேற்றுமை யுருபு சேர்ந்து நிற்றலின் இத் தொடர் ஐந்தாம் வேற்றுமைத் தொகா நிலைத்தொடர் அல்லது ஐந்தாம் வேற்றுமை விரி எனப்படும்.

**நெல்லினது பொரி**—**அது** என்னும் ஆரும் வேற் றுமை யுருபு இரு சொற்களுக்கிடையில் விரிந்து நிற்ற லின் இத்தொடர் ஆரும் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் அல்லது ஆரும் வேற்றுமை விரி எனப்படும்.

**ஊரில் இருக்கிருன்**—ஏழாம் வேற்றுமை யுரு பாகிய **இல்** என்பது இரு சொற்களுக்குமிடையில் வெளிப்பட்டு வருதலின், இத்தொடர் ஏழாம் வேற்று மைத் தொகாநிலைத் தொடர் அல்லது ஏழாம் வேற்றுமை விரி எனப்படும்.

இவ்வாறு வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் ஆறுவகையில் வரும்.

(2) அல்வழித் தொகாநிலைத்தொடர்

1. இராமன் வந்தான்—இத்தொடரில் இராமன் எழுவாய். இதுபோல் ஒருசொல் எழுவாயுடன் தொடர்ந்து வருவது எழுவாய்த் தொடராம்.

2. இராமா வா—இராமா-விளி. இதுபோல் ஒரு சொல் விளிவேற்றுமையைத் தொடர்ந்து வருவது விளித்தொடராம்.

3. உண்ட சாத்தன்—தெரிநிலைப் பெயரெச்சத் தொடர்.

கரிய கொற்றன்—குறிப்புப் பெயரெச்சத் தொடர்.

உண்ட, கரிய என்னும் எச்சங்கள் பெயரைக் கொண்டு முடிந்ததால் பெயரெச்சத் தொடர்களாம்.

4. உண்டு வந்தான்—தெரிநிலை } வினையெச்சத்
இன்றி வந்தான்—குறிப்பு } தொடர்

உண்டு, இன்றி என்னும் எச்சங்கள் வினையைக் கொண்டு முடிந்ததால் வினையெச்சத் தொடராம்.

5. உண்டான் சாத்தன்—உண்டான் தெரிநிலை வினைமுற்று. இதுபோல் ஒருசொல் தெரிநிலை வினை முற்றுடன் தொடர்ந்து வருவது தெரிநிலை வினைமுற்றுத் தொடராம்.

6. கரியன் கொற்றன்—கரியன் குறிப்பு வினை முற்று. இதுபோல் ஒருசொல் குறிப்பு வினைமுற்றுடன் தொடர்ந்து வருவது குறிப்புவினை முற்றுத் தொடராம்.

7. மற்று ஒன்று—மற்று, இடைச்சொல். இது போல் ஒருசொல் இடைச் சொல்லுடன் தொடர்ந்து வருவது இடைச்சொற் ருெடராம்.

8. நனிபேதை—நனி, உரிச்சொல். இதுபோல் ஒருசொல் உரிச்சொல்லுடன் தொடர்ந்து வருவது உரிச்சொற் ருெடராம்.

9. தீத் தீத் தீ;பாம்பு பாம்பு—இவை அடுக்குகள். இது போல் ஒருசொல்லே அடுக்கித் தொடர்ந்து வருவது அடுக்குத் தொடராம்.

ந சூ. 31. முற்றீ ரெச்சம் எழுவாய் விளிப்பொருள்.
ஆறுரு பிடையுரி அடுக்கிவை தொகாநிலே.

## விஞக்கள்

1. வழக்காவது யாது ?
2. இயல்பு வழக்கு என்ருல் என்ன ?
3. முன்றில், நிலம், புதுவை, பறி, துஞ்சிஞர்—இலக்கணக் குறிப்பு வரைக.
4. தொகைநிலேத்தொடர் எத்தனே வகைப்படும் ?
5. மாமரம், ஊர்நடு, மதிமுகம், மலே விளக்கு—இன்ன தொகையென்று கூறு.
6. கீழ்வரும் தொடர்களுக்குப் பெயர் கூறுக :—
சாத்தனது கை, செய்த வேலே, பாம்பு பாம்பு, பொன்னம்பலம், நனி பேதை.
7. தொகாநிலே—நன்னூல் சூத்திரம் வரைக.

# 7. புணர்ச்சி

## 1. புணர்ச்சியாவது யாது?

நிலைமொழி ஈற்றெழுத்தும், வருமொழி முதலெழுத்தும்ஒன்றுபடப் புணர்வது புணர்ச்சி எனப்படும் [புணர்ச்சி - சேர்க்கை.]

நிலைமொழி - முதலில் நிற்கும் மொழி. வருமொழி- பின்னர் வரும் மொழி.

முருகன் வந்தான் - 'இதில் முருகன்' முதலில் நிற்பதால் நிலைமொழி. 'வந்தான்' பின்னர் நிற்பதால் வருமொழி.

மணி, பனை—இவைகளின் ஈற்றில் உள்ள ணி, னை என்ற உயிர் மெய்களுள் (ண் + இ) (ன் + ஐ) இ, ஐ என்ற உயிரெழுத்துக்கள் இருப்பதால் இவை உயிரீறுகளாம். நிலம், பொருள்—இவைகளின் ஈற்றில் 'ம்' 'ள்' என்னும் மெய்யெழுத்துக்கள் இருப்பதால் இவை மெய்யீறுகளாம்.

ஆகவே நிலை மொழியினது ஈறு உயிரீறு, மெய்யீறு என இருவகைப்படும்.

இலை, ஏணி—இவைகளின் முதலில் இ, ஏ, என்ற உயிர் எழுத்துக்கள் இருப்பதால் இவை உயிர் முதல்களாம்.

கிளி, மலை—இவைகளின் முதலில் உள்ள கி, ம என்னும் உயிமெய்களுள் (க் + இ) (ம் + அ) க், ம், என்ற மெய்யெழுத்துக்கள் இருப்பதால் இவை மெய் முதல்களாம்.

ஆகவே வருமொழியினது முதல் உயிர்முதல் மெய் முதல் என இருவகைப்படும்.

நிலைமொழி ஈறு வருமொழி முதலோடு சேர்தல் நான்கு வகைப்படும்.

| | | | |
|---|---|---|---|
| பனை | + ஓலை | — | உயிர் முன் உயிர் |
| பனை | + மரம் | — | உயிர் முன் மெய் |
| பொன் | + குடம் | — | மெய் முன் மெய் |
| பொன் | + ஒளி | — | மெய் முன் உயிர் |

எனவே நிலைமொழி ஈற்று இருவகையோடு வருமொழி முதல் இருவகையும் சேர்ந்து உறழ நான்கு வகைப்படும்.

## 2. இயல்பு-விகாரம்

### (1) இயல்பு புணர்ச்சி

| | | | |
|---|---|---|---|
| பொன் | + மணி | — | பொன்மணி |
| நெல் | + விளைவு | — | நெல்விளைவு |
| மலை | + நெல் | — | மலைநெல். |

இவ்வாறு நிலைமொழி ஈற்றெழுத்தும் வருமொழி முதலெழுத்தும் யாதொரு விகாரமுமின்றிப் புணர்வது இயல்பு புணர்ச்சியாம் (இயல்பு-இயற்கைத்தன்மை)

### (2) விகாரப் புணர்ச்சி

| | | | |
|---|---|---|---|
| திரு | + குறள் | — | திருக்குறள் |
| புளி | + பழம் | — | புளியம்பழம் |

இவ்வாறு ஓர் எழுத்தாவது சாரியையாவது தோன்றுவது **தோன்றல்** விகாரமாம்.

பல் + பொடி — பற்பொடி
மண் + குடம் — மட்குடம்

இவ்வாறு ஒரு எழுத்து மற்றொரு எழுத்தாக வேறுபடுவது **திரிதல்** விகாரமாம். (திரிதல்-வேறுபடுதல்)

மரம் + வேர் — மரவேர்
புறம் + நானூறு — புறநானூறு.

இவ்வாறு உள்ள எழுத்துக் கெடுவது **கெடுதல்** **விகாரமாம்.**

மேல் காட்டிய உதாரணங்களிலிருந்து விகாரப் புணர்ச்சி மூன்று வகைப்படும் என அறியலாம். அவை முறையே **தோன்றல், திரிதல், கெடுதல்** என்பனவாம்.

மேலும் புணர்ச்சி, இயல்பு புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி என இருவகைப்படும் என்றும் அறியலாம்.

ந. சூ. 32. தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்தும் ஆகும்.

குதிரை + கால் = குதிரைக்கால் — தோன்றல்.
வட்டம் + கல் = வட்டக்கல் — கெடுதலும், தோன்றலும்,
பனை + காய் = பலங்காய் — கெடுதலும், தோன்றலும், திரிதலும்.

இவைகளிலிருந்து ஒரு புணர்ச்சிக்கு ஒரு விகாரமேயன்றி இரண்டும், மூன்றும் வருவது உண்டு என அறியலாம்.

## 3. மெய்யீற்றின் முன் உயிர்

### பொது விதி

கடல் + ஆழம் — கடலாழம்
புகழ் + அழகியது — புகழழகியது
தேன் + இனியது — தேனினியது.

இவ்வாறு நிலைமொழி மெய்யீற்றின் முன் வருமொழி உயிர் வந்து புணர்ந்தால் அவ்வுயிர் அம்மெய் எழுத்தின் மேல் ஏறி நிற்கும். இதுவும் இயல்பு புணர்ச்சியேயாம்.

ந. சூ. 33. உடல் மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே.

### சிறப்பு விதி

பொன் + அரிது — பொன்னரிது
கல் + எறிந்தான் — கல்லெறிந்தான்
எள் + அருமை — எள்ளருமை.

இவ்வாறு தனிக்குற்றெழுத்தைத் சார்ந்த மெய்யீற்றின் முன் உயிர்வந்தால்,அம்மெய்யெழுத்தே இரட்டிக்கும் (இரட்டிக்கும் - இரண்டுபடும்)

இவ்வாறு இரட்டிப்பது நிலைமொழியோடு பொருத்தமுடையதாய் இருத்தல் வேண்டும்.

ந. சூ. 34. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

## 4. உடம்படுமெய்

கிளி + அழகு = கிளி + ய் + அழகு = கிளியழகு
பலா + இனிது = பலா + வ் + இனிது = பலாவினிது.

இவ்வாறு நிலைமொழியின் ஈற்றிலும், வருமொழியின் முதலிலும் உயிரெழுத்துக்கள் நின்றால் ஒருமெய்யெழுத்தின் உதவியின்றி அவை தாமே புணரமுடியாததலின் அவ்வுயிர் எழுத்துக்களை இணைக்க (உடம்படுத்த) இடையில் ய், வ் என்னும் மெய்யெழுத்துக்களுள் ஒன்று வரும். இவ்விரு மெய்யெழுத்துக்களும் உடம்படுமெய் என வழங்கப்படும்.

### யகர உடம்படுமெய்

| | | | |
|---|---|---|---|
| சரி | + என்றான் | — | சரியென்றான் |
| தீ | + எரிந்தது | — | தீயெரிந்தது |
| பனை | + உயர்ந்தது | — | பனையுயர்ந்தது |

இவ்வாறு இ, ஈ, ஐ ஆகிய நிலைமொழி உயிரீற்றின் முன் உயிர் முதன் மொழிவந்தால், இடையில் யகர உடம்படுமெய் தோன்றும்.

| | | | |
|---|---|---|---|
| பல | + அணி | — | பலவணி |
| மா | + இலை | — | மாவிலை |
| திரு | + உளம் | — | திருவுளம் |
| பூ | + இதழ் | — | பூவிதழ் |
| நொ | + அழகா | — | நொவ்வழகா |
| போ | + என்றார் | — | போவென்றார் |
| கௌ | + அழகு | — | கௌவழகு. |

இவ்வாறு அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ ஆகிய ஏழு உயிர் ஈற்றின் முன் உயிர் முதன்மொழி வந்தால் இடையில் வகர உடம்படுமெய் தோன்றும்.

அவனே + அறிஞன் — அவனேயறிஞன்
சே + ஏறி — சேவேறி (சே - எருது)

இவ்வாறு ஏகார உயிர் ஈற்றின் முன் உயிர் முதன் மொழி வந்தால் இடையில் யகரமேனும், வகரமேனும் உடம்படு மெய்யாகத் தோன்றும்.

(எகர உயிர் மொழிக்கு ஈற்றில் வராமையின், அதை ஈண்டுக் கூறவில்லை.)

ந. சூ. 35. இ, ஈ, ஐ வழி யவ்வும்; ஏனை
உயிர்வழிவவ்வும்; ஏ முன்
இவ்விருமையும்
உயிர்வரின்உடம்படுமெய்யென்ருகும்.

## 5. உயிர்முன் வல்லினம்

நிலை மொழி ஈற்றின்கண் நிற்கும் உயிரீறு இரு வகைப்படும். (1) இயல்பு உயிரீறு (2) விதிஉயிரீறு.

(1) இயல்பு உயிரீறு

விள, பலா, தலை.

இச்சொற்களுக்கு இறுதியில் உயிரானது எந்த விதமான விகாரமுமின்றி இயற்கையாக நின்றதால் இயல்பு உயிரீருயிற்று.

(2) விதி உயிரீறு

மரம் - மர ; நேற்று - நேற்றை.

இச்சொற்களுக்கு இறுதியில் நின்ற மெய்யும் உயிரும் ஒருவிதிபற்றி நீங்கி மற்ருெரு உயிரீருக நின்ற தால் விதி உயிரீருயிற்று.

## பொது விதி

1. வாழை + பழம்—வாழைப்பழம்.

ஆட + சென்றுன்—ஆடச்சென்றுன்.

2. மரம் + கிளை = மர + கிளை—மரக்கிளை.

நேற்று + பொழுது = நேற்றை + பொழுது
—நேற்றைப்பொழுது.

முதலில் உள்ள இரண்டு உதாரணங்களில், இயல்பாக நின்ற உயிரீற்றின் முன் வல்லினம் வந்து புணர, வல்லினம் மிக்கது.

இரண்டவதாகக் கூறப்பட்டுள்ள இரண்டு உதாரணங்களில், விதி உயிரீற்றின் முன் வல்லினம் வந்து புணர, வல்லினம் மிக்கது.

இவ்வாறு இயல்பாக வேனும், விதியாக வேனும் நிலைமொழி யீற்றின் நின்ற உயிர் முன் வருமொழியில் க, ச, த, ப என்னும் வல்லின மெய்கள் வரின் அவை பெரும்பாலும் மிகும். [வல்லினத்தில் ட, ற என்பன மொழிக்கு முதலில் வாரா.]

ந. சூ. 36. இயல்பினும் விதியினும் நின்ற
உயிர் முன்
க, ச, த, ப மிகும் விதவாதன மன்னே.

பூ + கொடி = பூக்கொடி
பூ + கொடி = பூங்கொடி
பூ + செடி = பூச்செடி
பூ + செடி = பூஞ்செடி

இவ்வாறு பூ என்னும் பெயர்ச்சொல்லின் முன் வரும் வல்லெழுத்து மிகுதலே யன்றி, அவற்றிற்கு இனமாகிய மெல்லெழுத்து மிகுந்தும் வரும்.

ந.சூ. 37. பூப்பெயர் முன் இன மென்மையும் தோன்றும்.

**சிறப்பு விதி**

பொது விதியை மறுத்துக் கூறுவதே சிறப்பு விதியாம்.

அவனே + கண்டான்—அவனே கண்டான்.

அரசனோ + கொடியன்—அரசனோ கொடியன்.

இவ்வாறு ஏ, ஓ என்னும் இடைச்சொற்களாகிய உயிர் ஈற்றின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

ந. சூ. 38. இடைச் சொல் ஏ, ஓ முன்வரின் இயல்பே.

நம்பி + பெரியன் = நம்பி பெரியன்—உயர் திணைப் பெயர்.

பிள்ளை + சிறியன் = பிள்ளை சிறியன்—பொதுப் பெயர்.

இவ்வாறு உயிரீற்று உயர்திணைப் பெயர்க்கும், பொதுப் பெயர்க்கும் முன்வரும் வல்லினம் இயல்பாகும்.

## 6. குற்றியலுகரப் புணர்ச்சி

### (1) குற்றியலுகரத்தின் முன் உயிர்

கீழ்வருவனவற்றைக் கவனியுங்கள்:—

1. ஆடு + எங்கே—ஆடெங்கே?
2. அஃது + எப்படி—அஃதெப்படி?

3. விறகு + எடு—விறகெடு.
4. பட்டு + ஆடை—பட்டாடை.
5. பஞ்சு + ஆலை—பஞ்சாலை.
6. அன்பு + ஆர்ந்த—அன்பார்ந்த.

ஆடு, அஃது முதலியன குற்றியலுகரச் சொற்கள். குற்றியலுகரத்தின் முன் உயிர் வர, குற்றியலுகரம், தான் ஏறிப மெய்யை வீட்டு ஓட, நின்ற மெய்யொடு, வருமொழி முதலில் உள்ள உயிரெழுத்து இணைந்து நின்றது.

ஆடு + எங்கே = ஆட் + எங்கே = ஆடெங்கே?

இவ்வாறே பிறவும்.

(2) குற்றியலுகரத்தின் முன் யகரம்

நாடு + யாது = நாடியாது?

பந்து + யாது = பந்தியாது?

குற்றியலுகரத்தின் முன் யகரம் வந்து புணரின், அக் குற்றியலுகரம் இகரமாகத் திரியும். அவ்விகரம் **குற்றியலிகரம்** எனப்படும்.

(3) முற்றியலுகரத்தின் முன் உயிர்

கதவு + அழகு = கதவழகு.

கதவு + யாது = கதவியாது?

இவ்வாறே முற்றியலுகரமும் சில இடங்களில் குற்றியலுகரத்திற்குக் கூறப்பட்ட விதியைப் பெற்றுப் புணரும்.

கேட்பது + உம் = கேட்பதுவும்.

அழைப்பது + ஏ = அழைப்பதுவே.

இவ்வாறு சிறுபான்மை குற்றியலுகரத்தின் முன் உயிர் வந்து புணரும்போது, குற்றியலுகரம் கெடாமல், **வகர உடம்படுமெய்** பெறுதலும் உண்டு.

ந.சூ. 39. உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யாம்;முற்றுமற் றொரோவழி

## வினாக்கள்

1. புணர்ச்சியாவது யாது?
2. புணர்ச்சி எத்தனை வகைப்படும்?
3. இயல்புபுணர்ச்சி, விகாரப் புணர்ச்சி-விளக்கு.
4. பட்டு நூல், பாற்சோறு, வாழைப் பழம், மரவேர்-இருவகைப் புணர்ச்சிகளையும் எடுத்துக்கூறு.
5. உடம்படு மெய்யென்றால் என்ன?
6. இவை எவ்வாறு புணரும் :--

   மணி + அழகு        சே + அடி
   நூல் + ஏணி        பூ + செடி

7. பண்ணழகு, அவனே சென்றான்? பூஞ்சோலை-புணர்ச்சி விதி கூறு.
8. குற்றியலுகரத்தின் முன் உயிர்வரின் எவ்வாறுபுணரும்? சூத்திரம் கூறுக.
9. குற்றியலிகரம் என்றால் என்ன?
10. இயல்பு உயிரீறு, விதி உயிரீறு--விளக்கு.

# 8. யாப்பு

## 1. யாப்பின் உறுப்புக்கள்

**யாப்பு :—**பலவகைச் சொற்களைக் கொண்டு சிறந்த புலவர்களால் பொருட்கு இடமாக அழகுபெறப் பாடப்படுவது யாப்பாம். [யாப்பு-கட்டுதல் ; தொழிற் பெயர்.]

யாப்பு, பாட்டு, பா, செய்யுள், கவி, தூக்கு என்பன ஒரு பொருட் சொற்கள் ஆகும்.

யாப்பிற்குரிய உறுப்புக்கள் **எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை** என ஆறு ஆகும்.

**எழுத்து :—** முதலெழுத்தும், சார்பெழுத்துமாகிய எழுத்துக்கள். இவை அசைகளை ஆக்குவதற்கு உறுப்பாக நிற்பனவாம்.

## 2. அசை

**அசை:—**எழுத்துக்களின் ஒலித் தொடர்ச்சியை அசைத்து இசை கொண்டு, சீருக்கு உறுப்பாக வந்து நிற்பது அசையாம். அசைத்து இசைப்பது அசையாம்.

அது **நேரசை, நிரையசை** என இருவகைப்படும்.

(1) நேரசை

இது நான்கு விதமாக வரும்.

ப — குறில் தனித்து வந்த நேரசை
பா — நெடில் தனித்து வந்த நேரசை
பல் — குறில் ஒற்றடுத்து வந்த நேரசை
பால் — நெடில் ஒற்றடுத்து வந்த நேரசை

ஆகவே குறில் தனித்தும், நெடில் தனித்தும், குறில் ஒற்றடுத்தும், நெடில் ஒற்றடுத்தும் வருவது நேரசையாம்.

(2) நிரையசை

இதுவும் நான்கு விதமாக வரும்.

பழ — இரு குறில்கள் இணைந்து வந்த நிரையசை

விளா — குறிலும், நெடிலும் இணைந்துவந்த நிரையசை

பழம் — இரு குறில்கள் இணைந்து ஒற்றடுத்து வந்த நிரையசை

விளாம் — குறிலும், நெடிலும்இணைந்து ஒற்றடுத்து வந்த நிரையசை

ஆகவே, இரு குறில்கள் இணைந்து நின்றேனும், ஒற்றடுத்தேனும், குறிலும் நெடிலும் இணைந்து நின்றேனும், ஒற்றடுத்தேனும் வருவது நிரையசையாம்.

**குறிப்பு** :—'அ, ஆ' என்பது போல வீட்டு இசைத்தால் அல்லது குற்றெழுத்து ஒரு சீருக்கு முதலிலும் இடையிலும் தனித்து நேரசையாகாது. ஒற்றெழுத்து மட்டும் தனியே அசையாவதில்லை. நெடிலிரண்டு இணைந்தும், நெடில் குறில் இணைந்தும் நிரையசை ஆகாவாம்.

## 3. சீர்

சீர் :—நேரசை, நிரையசை என்னும் இருவகையசைகள் சிறுபான்மை தனித்தேனும், பெரும்பான்மை இரண்டு முதல் நான்கு வரையில் தொடர்ந்தேனும் இயல்பட இசைத்து நிற்பது சீராம். [சீர்—தாளம்; தாளவறுதி.]

இஃது ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச் சீர் என நான்கு வகைப்படும்.

(1) ஓரசைச் சீர்

1. செயற் கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா **தார்.**

2. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி **யெனல்.**

இவற்றில் முதற் குறளின் இறுதிச் சீராகிய **தார்** என்பது நேர் என்னும் ஓரசைச் சீராம். இரண்டாவது குறளின் ஈற்றுச் சீராகிய **எனல்** என்பது நிரை என்னும் ஓரசைச் சீராம்.

நேரசையேனும், நிரையசையேனும் தனித்து வந்தால் அது ஓரசைச் சீராம். ஓரசைச் சீர், தனிச்சீர், அசைச்சீர் என்பன ஒரு பொருளைத் தருவன.

நேர் அசை ஒன்றினால் ஆகும் சீர் **நாள்** எனும் வாய் பாட்டால் வழங்கப்படும். நிரை அசை ஒன்றினால் ஆகும் சீர் **மலர்** எனும் வாய்பாட்டால் வழங்கப்படும்.

இவையன்றி நேரசையோடு கூடிவரும் உகரத்தை **நேர்பு அசை** என்றும், நிரையசையோடு கூடிவரும் உகரத்தை **நிரைபு அசை** என்றும் கொள்ளவேண்டும்.

வீடு — நேர்பு — காசு
உலகு — நிரைபு — பிறப்பு

நேர்பு அசைக்கு வாய்பாடு காசு ஆகும். நிரைபு அசைக்கு வாய்பாடு பிறப்பு ஆகும். ஆகவே நாள், மலர் காசு, பிறப்பு என்ற இந்த நான்கு வாய்பாடுகளாலான ஓரசைச் சீர்கள் பெரும்பாலும் வெண்பாவின் ஈற்றில் வந்து நிற்கும்.

(2) ஈரசைச் சீர்

பெரியர்—பெரி—யர்; கடவுள்—கட—வுள் என

இவ்வாறு இரண்டு அசைகளினால் அமையும் சீர் ஈரசைச் சீர் எனப்படும். இது மாச்சீர், விளச்சீர் என இரு வகைப்படும்.

| | அசை | வாய்பாடு |
|---|---|---|
| செய் தார் | நேர் நேர் | தேமா |
| கெடு தல் | நிரை நேர் | புளிமா |
| மட மகள் | நிரை நிரை | கருவிளம் |
| தீ யவை | நேர் நிரை | கூவிளம் |

அசைகள் நிற்கும் முறையை அனுசரித்து ஈரசைச் சீர் மேற் காட்டியபடி நான்குவிதமாகும்.

அவைகளுக்குரிய வாய்பாடும் காட்டப்பட்டுள்ளன.

இவற்றுள் முதலிரண்டு ஈரசைச் சீர்களும் **மா** என்று வாய்பாடு பெற்று முடிவதால் இவை **மாச்சீர்** எனப்படும்.

பின்னிரண்டு ஈரசைச்சீர்களும் **விளம்** என்று வாய்பாடு பெற்று முடிவதால் இவை **விளச்சீர்** எனப்படும்.

ஆக தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பன நான்கும் ஈரசைச்சீர்களாம். இவை இயற்சீர் அல்லது அகவற்சீர் அல்லது ஆசிரிய உரிச்சீர் எனப் பெயர் பெறும். இவை பெரும் பாலும் ஆசிரியப் பாவில் மிகுதியும் பயின்று வரும்.

(3) மூவசைச் சீர்

வை—யக—மும்; வா—னக—மும்; என இவ்வாறு மூன்று அசைகளினால் அமையும் சீர் மூவசைச்சீர் எனப்படும்.

இஃது காய்ச்சீர், கனிச்சீர் என இருவகைப்படும். இது உரிச்சீர் என்றும் வழங்கப்படும்.

### 1. காய்ச் சீர்

| | அசை | வாய்பாடு |
|---|---|---|
| ஆனந்த | நேர் நேர் நேர் | தேமாங்காய் |
| அடிக் கன் பு | நிரை நேர் நேர் | புளி மாங் காய் |
| தனை யொழி வாய் | நிரை நிரை நேர் | கருவிளங் காய் |
| செய்ம் மன னே | நேர் நிரை நேர் | கூவிளங் காய் |

இவ்வாறு மூவசைச்சீரின் ஈற்றில் நேரசை நிற்பது காய்ச்சீர் ஆகும். இவை நான்கு. அவைகளுக்கு வாய்பாடு தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய் கூவிளங்காய். இவைகள் ஈற்றில் **காய்** என்று முடிவதால் **காய்ச்சீர்** எனப்படும். இவை நான்கும் வெண்பாவிற்கு உரியனவாதலின் வெண்சீர் எனவும், வெண்பாவுரிச்சீர் எனவும் வழங்கப்படும்.

### 2. கனிச் சீர்

| | அசை | வாய்பாடு |
|---|---|---|
| மண் ணீ ரனல் — | நேர் நேர் நிரை — | தேமாங் கனி |
| வளி வா னெடு — | நிரை நேர் நிரை — | புளி மாங்கனி |

விடைய பசு பதி — நிரை நிரை நிரை — கரு
விளங்கனி

வெங் கதி ருயிர் — நேர் நிரை நிரை — கூவிளங்
கனி

இவ்வாறு மூவசைச்சீரின் ஈற்றில் நிரையசை நிற்பது கனிச்சீர் ஆகும். இவை நான்கு. அவைகளுக்கு வாய்பாடு தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி. இவைகள் ஈற்றில் **கனி** என்று முடிவதால் **கனிச்சீர்** எனப்படும். இவை நான்கும் வஞ்சிப்பாவிற்கு உரியனவாதலின் வஞ்சிச்சீர் எனவும், வஞ்சியுரிச்சீர் எனவும் வழங்கப்படும்.

## (4) நாலசைச் சீர்

**நாலசைச்சீர்** மூவசைச் சீர்கள் எட்டின் இறுதியிலும் தனித்தனி நேரசையும், நிரையசையும், கூட்டப் பதினாறு விதமாய், நந்நான்கு அசைகள் கூடிச் சீராய் வருவது நாலசைச் சீராம். இது பொதுச்சீர் எனவும் பெயர் பெறும்.

| அசை | வாய்பாடு | |
|---|---|---|
| நேர் நேர் நேர் நேர் | தே மாந் தண் பூ | பூச்சீர். |
| நிரை நேர் நேர் நேர் | புளி மாந் தண் பூ | |
| நிரை நிரை நேர் நேர் | கரு விளந்தண் பூ | |
| நேர் நிரை நேர் நேர் | கூவிளந் தண் பூ | |
| நேர் நேர் நிரை நேர் | தே மா நறும் பூ | |
| நிரை நேர் நிரை நேர் | புளிமா நறும் பூ | |
| நிரை நிரை நிரை நேர் | கருவிள நறும் பூ | |
| நேர் நிரை நிரை நேர் | கூவிள நறும் பூ | |

| | | |
|---|---|---|
| நேர் நேர் நேர் நிரை | தேமாந்தண்ணிழல் | நிழற் சீர். |
| நிரை நேர் நேர் நிரை | புளிமாந் தண்ணிழல் | |
| நிரை நிரை நேர் நிரை | கருவிளந் தண்ணிழல் | |
| நேர் நிரை நேர் நிரை | கூவிளந் தண்ணிழல் | |
| நேர் நேர் நிரை நிரை | தேமா நறு நிழல் | |
| நிரை நேர் நிரை நிரை | புளிமா நறு நிழல் | |
| நிரை நிரை நிரை நிரை | கரு விள நறு நிழல் | |
| நேர் நிரை நிரை நிரை | கூவிள நறு நிழல் | |

இவ்வாறு நாலசைச்சீர்கள் பதினாறும்.

## வினாக்கள்

1. யாப்பாவது யாது ?
2. யாப்பின் உறுப்புகள் யாவை ?
3. நேரசை, நிரையசை - விளக்கு.
4. பால், நடு, நிலா, கூ, கல், விடு - இவை என்ன அசைகள் ?
5. ஈரசைச்சீர்கள் எப்பாவில் வரும் ?
6. நல்லான், கடுங்சொல், போவான், குளிர் நிலம் - வாய்பாடு கூறு.
7. மூவசைச்சீர்கள் எவ்வாறு வரும் ? விளக்கி உதாரணம் கொடு.

# 9. அணி

செய்யுளுக்கு அழகு செய்து நிற்பது **அணி** என்று கூறப்படும். இஃது **அலங்காரம்** என்றும் வழங்கப் படும்.

இது சொல்லணி, பொருளணி என்று இருவகைப் படும். சொல் பற்றியது சொல்லணி; பொருள் பற்றியது பொருளணி.

சொல்லணி மடக்கு, சித்திரம் என இருவகைப் படும். பொருளணி உவமை, உருவகம், வேற்றுப் பொருள்வைப்பு என பலவகைப்படும்.

## 1. இயல்பு நவிற்சி

நீல மணி மிடற்ற னீண்ட சடை முடியன்
நூலணிந்த மார்ப னுதல் விழியன்—தோலு
டையன்
கைம்மான் மறியன் கனன்மழுவன் கச்சாலே
எம்மா னிமையோர்க் கிறை.

இச் செய்யுளில் கச்சாலே எம்மானாகிய சிவபெருமா னின் தன்மைகளை உள்ளவாறு இயல்பாக ஆசிரியர் கூறி யிருக்கிறார். நீல மணி மிடறு, நீண்ட சடை முடி, நூலணிந்த மார்பு, நுதல் விழி போன்ற பிறவும் இயல் பாகவே கூறப்பட்டுள்ளன. இது போல் உள்ளதை உள்ளவாறு, இயற்கையாக, ஆசிரியர் தன் கருத்துக் களையும், கற்பனைகளையும் ஏற்றாமல் விளக்கிக் கூறுவது **இயல்பு நவிற்சியணியாம்.**

## 2. உயர்வு நவிற்சி

'வன் கொண்டல் விட்டு
மதிமுட்டுவன மாடம்'

இவ்வடியில் மாடங்கள் மேகங்களைத் தாண்டி, மதியை முட்டுவதாக உயர்த்திக் கூறியுள்ளதால் இவ்வணி **உயர்வு நவிற்சியணியாம்.**

ஆகவே ஒரு பொருளுக்கு உள்ள தன்மையை உள்ளவாறு கூறாது கேட்போர் வியக்கும்படி உயர்த்திக் கூறுவது **உயர்வு நவிற்சியணியாம்.**

## 3. உவமையணி

பால்போலும் இன்சொற் பவளம்போற் செந்துவர்வாய்
சேல்போற் பிறழுந் திருநெடுங்கண்—மேலாம்
புயல்போற் கொடைக்கைப் புனலுடன் கொல்லி
அயல்போலும் வாழ்வ தவர்.

இச் செய்யுளில் இன்சொல்லுக்குப் பாலும், செந்துவர் வாய்க்குப் பவளமும், கண்களுக்குச் சேலும், கைகளுக்கு மேகமும் உவமையாக வந்துள்ளன. இதுபோல் ஒரு பொருளோடு மற்றொரு பொருளை ஒப்பாகச் சொல்வது **உவமையணியாம்.**

இதில் உபமானம், உபமேயம், உவமஉருபு பொதுத் தன்மை ஆகிய நான்கு பகுதிகள் உள்ளன.

(1) விரிவுவமை

பால் போலும் இன் சொல்.

பால்-உபமானம்; சொல்-உபமேயம்; போலும்-உவமஉருபு; இனிமை-பொதுத் தன்மை.
இவ்வாறு இந் நான்கு பகுதிகளும் வெளிப்படத் தெரியும்படி அமைவது **விரிவுவமை** எனப்படும்.

(2) தொகையுவமை

தாமரை வாண் முகத்துத் தண்டரளம்
போன் முறுவல்
காமரு வேய்புரைதோட் காரிகையீர்!

இவ்வடிகளில் தாமரை வாள் முகம் என்று வந்துள்ளது. தாமரை - உபமானம்; முகம் - உபமேயம்; வாள்-பொதுத் தன்மை ஆகிய மூன்று பகுதிகள் வந்துள்ளன. ஆனால் உவமஉருபு எதுவும் வரவில்லை. அதே போல், தண்டரளம்-உபமானம்; முறுவல்-உபமேயம்; போல்-உவமஉருபு ஆகிய மூன்று பகுதிகள் வந்துள்ளன. ஆனால் வெண்மை என்ற பொதுத் தன்மை கூறப்படவில்லை. இதுபோல் உவமஉருபுகள் நான்கனுள் ஒன்றோ, பலவோ தொக்கி வருவது **தொகையுவமையாம்.**

(3) இல்பொருள் உவமை

'இரு கை வேழத் திராகவன் தன் கதை'

இவ்வடியில் கூறப்பட்டுள்ள இரண்டு கைகளையுடைய யானை உலகில் இல்லாமையால் இது போல் உலகில் இல்லாத ஒருபொருளை உவமையாகக் கூறுவது **இல்பொருள் உவமை யணியாம்.**

## 4. உருவகம் (பொது)

அங்கை மலரு மடித்தளிருங் கண்வண்டும்
கொங்கை முகிழுங் குழற் காரும்—தாங்கிய
தோர்
மாதர்க் கொடியுளதா னண்பா ! வதற்
கெழுந்த
காதற் குளதோ கரை.

இப்பாடலில் அங்கையையே மலராகவும், அடியையே தளிராகவும், கண்களையே வண்டாகவும், குழலையே மேகமாகவும் கூறப்பட்டுள்ளது. இது போன்று உபமானத்திற்கும் உபமேயத்திற்கும் வேற்றுமை கருதாது ஒன்றேபோல் கூறுவது **உருவகவணியாம்.**

இதில் உபமேயம் முன்னும் உபமானம் பின்னும் வரும். உவமஉருபு இருக்காது.

### வினாக்கள்

1. அணி என்றால் என்ன ?
2. அணி எத்தனை வகைப்படும் ?
3. உவமை யணி விளக்கு.
4. 'பவளம் போல் செந்துவர் வாய்' இது என்ன உவமை? விளக்கு.
5. உயர்வு நவிற்சி யணிக்கு உதாரணம் தந்து விளக்குக.
6. உவமைக்கும் உருவகத்திற்கும் உள்ள வேறுபாடு யாது?

# மொழிப் பயிற்சி

## 1. வாக்கியம் - பொது இலக்கணம் - வகைகள்.

நாம் பேசும் பொழுதும், எழுதும் பொழுதும் சொற்களையும், அவற்றின் தொகுதிகளையும் பயன் படுத்துகின்றோம். அச்சொற்கள், நம் கருத்தைப் பிறருக்குத் தெரிவிக்கும் வகையில் பொருட்பொருத்த முற அமைந்திருக்க வேண்டும்.

கீழ்வரும் சொற்றொடர்களைக் கவனிக்கவும்:—

இளமையிற் கல்.
முருகன் பள்ளிக்குச் சென்றான்.
தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி.

இவற்றில் ஒவ்வொரு சொற்றொடரும், ஒரு கருத்தைத் தெரிவிக்கும் வகையில் ஏற்றவாறு பொருட் பொருத்த முற அமைந்து ஒரு முற்றுப் பெற்ற கருத்தைத் தெரிவிக்கின்றன. ஆதலால் ஒவ்வொன்றும் ஒரு **வாக்கியம்** அல்லது முற்றுச் சொற்றொடர் என்று சொல்லப்படும்.

கீழ்வரும் சொற்றொடர்களைக் கவனி:—

1. வறுமையில் சான்றோர்க்கு அழகு செம்மை
2. ஓம்பப்படும் உயிரினும் ஒழுக்கம்
3. சாத்தனார் புலவர் சிறந்த ஒரு

ஒவ்வொரு தொகுதியிலும் பல சொற்கள் தொடர்ந்து நின்றும் பொருள் தராமையின் இவை

வாக்கியங்கள் ஆகா. ஒரு முடிந்த கருத்தைத் தர வேண்டுமாயின், இவை கீழ்வருமாறு அமையும்:—

1. சான்றோர்க்கு அழகு வறுமையிற் செம்மை.
2. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்.
3. சாத்தனார் ஒரு சிறந்த புலவர்.

எனவே சொற்கள் ஏற்றவாறு பொருட்பொருத்த முறத் தொடர்ந்து நின்று ஒரு முற்றுப் பெற்ற கருத்தைத் தெரிவிப்பின், அது, **வாக்கியம்** அல்லது **முற்றுச் சொற்றொடர்** என்று சொல்லப்படும்.

இவற்றைப் படியுங்கள் :—

1. செங்குட்டுவன் போர்க்களம் சென்று.........
2. பறவைகள் மாலையில்......................

மேற்கண்ட தொகுதி ஒவ்வொன்றிலும் சில சொற்கள் தொடர்ந்து நிற்கின்றன; ஆனால் இவை, ஓர் முடிந்த கருத்தைத் தெரிவிக்காமையின், இவை வாக்கியகங்கள் ஆகா. இவை **எச்சச் சொற்றொடர்** என்று கூறப்படும். இச்சொற்றொடர்களைப் பின்வருமாறு முடிக்கலாம்.

1. செங்குட்டுவன் போர்களம் சென்று பகைவரை வென்று வாகை சூடினன்.
2. பறவைகள் மாலையில் தம் கூடுகளுக்குத் திரும்பும்.

## வாக்கியத்தின் உறுப்புக்கள் (எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்)

ஒரு முடிந்த கருத்தைத் தெரிவிக்கும் சொற்றொடர் வாக்கியம் என்பது உங்களுக்குத் தெரியும். ஒரு

வாக்கியத்தின் முக்கிய உறுப்புக்கள் எழுவாயும் பயனிலையுமாகும்.

(1) எழுவாய்

**கண்ணன் வயலை உழுதான்.**

உழுதான் - தொழில். இத்தொழிலைச் செய்பவன் கண்ணன். எனவே, **கண்ணன்** என்பது எழுவாய். தொழிலைச் செய்யும் கர்த்தாவைக் குறிக்கும் சொல் எழுவாய் ஆகும். பெரும்பாலும் பெயர்ச் சொல்லே எழுவாயாக வரும்.

(2) பயனிலை

**உழுதான்** என்னும் சொல் எழுவாய் செய்யும் தொழிலைக் காட்டி, வாக்கியத்தின் பொருளை முடித்து நிற்கின்றது. இவ்வாறு வருவது **பயனிலையாம்.** பயனிலை பெரும்பாலும் வினைச் சொல்லாக இருக்கும்.

எனது தாய்மொழி **தமிழ்**

உங்கள் ஊர் **எது?**

இவ்வாக்கியங்கள் முறையே **தமிழ்** என்னும் பெயர்ச் சொல்லையும் **எது** என்னும் வினாச் சொல்லையும் பயனிலையாகக் கொண்டு முடிந்தன. எனவே பயனிலை, வினைச்சொல், பெயர்ச்சொல், வினா இவைகளில் ஒன்றாக இருக்கும். வினைச்சொல் பயனிலையாக வருவது பெரும் பான்மை.

(3) செயப்படுபொருள்

கண்ணன்—எழுவாய்; உழுதான்—பயனிலை; உழுதலாகிய தொழிலை ஏற்ற பொருளைக் குறிக்கும்

சொல் **வயல்**. இதுவே செயப்படுபொருளாம். இது இரண்டாம் வேற்றுமை உருபாகிய 'ஐ' என்பதனை ஏற்றுவரும். இவ்வுருபு மறைந்தும் வரும்.

**எழுவாயின் தொழிலை ஏற்கும் பொருள் செயப்படு பொருள் என்று சொல்லப்படும்.**

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய இவை வாக்கியத்தின் உறுப்புக்களாம்.

**எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களைக் காணும் வழி:**

வள்ளுவர் குறளை இயற்றினர்.

இவ்வாக்கியத்தின் பயனிலை **இயற்றினர்** என்பது.

இது வினைச்சொல்லாக வாக்கியத்தின் இறுதியில் வருவதைக்கொண்டு அறியலாம்.

பயனிலைக்கு முன் **யார், எவை, எது** முதலிய வற்றுள் ஏற்ற ஒன்றை வைத்துக் கேள்வி கேட்டால் வரும் விடையே எழுவாய் ஆகும்.

யார் இயற்றினர்? விடை **வள்ளுவர்**—இதுவே வாக்கியத்தின் எழுவாய்.

பயனிலைக்கு முன் **எதை, யாரை** என்பவற்றுள் ஏற்ற ஒன்றை வைத்துக் கேள்விகேட்டால் வரும் விடையே செயப்படுபொருளாகும்.

எதை இயற்றினர்? விடை **குறளை. குறள்**—இதுவே வாக்கியத்தின் செயப்படுபொருளாம்.

எழுவாய் வாக்கியத்தின் முதலில் வரும்; பயனிலை வாக்கியத்தின் இறுதியில் வரும்; செயப்படுபொருள்

இடையில் வரும். எழுவாய், செயப்படுபொருள், பயனிலை—இம்முறையில் சொற்கள் வாக்கியத்தில் அமைந்து வரும். பிற சொற்கள் இடையில் விரவி வரும்.

## தனி, தொடர், கலவை வாக்கியங்கள்

பின்வரும் வாக்கியங்களைக் கவனி:

1. காவிரியாறு சோழநாட்டை வளம்படுத்துகிறது.
2. பாண்டியர் தமிழ்ச் சங்கத்தை அமைத்தனர்; பல புலவர்களை ஆதரித்தனர்.
3. அவன் ஏழையாயினும் வறியர்க்கு உதவும் இயல்புடையன்.

### (1) தனிவாக்கியம்

முதல் வாக்கியம் ஒரு எழுவாயும், ஒரு பயனிலையும் கொண்டது. இது **தனிவாக்கியம்** எனப்படும்.

### (2) தொடர் வாக்கியம்

இரண்டாவது வாக்கியம் இரு தனிவாக்கியங்கள் கொண்டது. பாண்டியர் தமிழ்ச்சங்கத்தை அமைத்தனர்; பாண்டியர் பல புலவர்களை ஆதரித்தனர் என்னும் இரு தனிவாக்கியங்கள் மேற்கண்டவாறு சேர்ந்து வந்தன. இவ்வாறு வாக்கியங்கள் இரண்டு அல்லது பல சேர்ந்து வருவது **தொடர்வாக்கியம்** என்று சொல்லப்படும்.

(3) கலவை வாக்கியம்

மூன்றாம் எடுத்துக்காட்டிலும் இரண்டு வாக்கியங்கள் உள்ளன. அவை **அவன் ஏழை, (ஆயினும்) வறியர்க்கு உதவும் இயல்புடையவன்** என்பன. ஆனால், முதல் வாக்கியம் இரண்டாவது வாக்கியத்தைச் சார்ந்திருக்கிறது. ஆதலால் இது **சார்பு வாக்கியம்** அல்லது **அவயவ வாக்கியம்** என்றும், இரண்டாவது **முக்கிய வாக்கியம்** அல்லது **அவயவி வாக்கியம்** என்றும் சொல்லப்படும். ஒரு முக்கிய வாக்கியமும், ஒன்று அல்லது பல சார்பு வாக்கியங்களும் சேர்ந்து ஒரு முற்றுப் பெற்ற சொற்றொடராக வருவது **கலவை வாக்கியம்** எனப்படும்.

வாக்கியம், **தனிவாக்கியம், தொடர்வாக்கியம், கலவை வாக்கியம்** என்று மூன்று வகைப்படும். மேலும் வாக்கியங்கள் தாம் அறிவிக்கும் பொருளையொட்டி, **செய்தி வாக்கியம், வினா வாக்கியம், கட்டளை வாக்கியம், உணர்ச்சி வாக்கியம்** எனவும் பகுக்கப் படும்.

## வினாக்கள்

1. சான்றோர் சென்ற நெறி, சேரிட மறிந்து சேர், முல்லைக்குத் தேர் ஈந்த, கபிலரும் பரணரும், அறிவுடையோன் வழி அரசுஞ் செல்லும்—எச்சச் சொற்றொடர்களையும், முற்றுச் சொற்றொடர்களையும் எடுத்துக் கூறு.

2. எச்சச் சொற்றொடர்களை ஏற்றவாறு முடித்துக் கூறு.

3. வாக்கியம் என்றால் என்ன? அஃது எத்தனை வகைப் படும்?

4. இன்ன வாக்கியம் என்று கூறுக:—

1. சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடன்.
2. முருகன் ஏன் பள்ளிக்கு வரவில்லை என்று ஆசிரியர் கேட்டார்.
3. மழை பெய்தது; நாடு செழித்தது; மக்கள் மகிழ்ந்தனர்.
4. அரசனும் அமைச்சனும் சென்றனர்.
5. எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே.
6. தீதும் நன்றும் பிறர்தர வாரா.
7. நீலமணி மிடற்று ஒருவன் போல் வாழ்க.

# 2. வாக்கியப் பொருத்தம்

வாக்கியத்தின் முக்கிய உறுப்புக்கள் எழுவாயும், பயனிலையும் ஆகும். இவற்றின் திணை, பால், எண் இடங்கள் ஒத்திருக்க வேண்டும்.

கீழ்வருவனவற்றைக் கவனியுங்கள் :

## (1) தன்மை இடம்

**நான் படித்தேன்**

| | | திணை | பால் | எண் |
|---|---|---|---|---|
| எழுவாய் | **நான்** | — | — | ஒருமை |
| பயனிலை | **படித்தேன்** | — | — | ஒருமை |

எழுவாய், பயனிலை இரண்டும் தன்மை, ஒருமை.

**யாங்கள் படித்தோம்**

| | | | | |
|---|---|---|---|---|
| எழுவாய் | யாங்கள் | — | — | பன்மை |
| பயனிலை | படித்தோம் | — | — | பன்மை |

எழுவாய், பயனிலை—தன்மை இடம், பன்மை எண்.

## (2) முன்னிலை இடம்

**நீ படித்தாய்**

| | | | | |
|---|---|---|---|---|
| எழுவாய் | நீ | — | — | ஒருமை |
| பயனிலை | படித்தாய் | — | — | ஒருமை |

எழுவாய், பயனிலை—முன்னிலை இடம், ஒருமை எண்.

**நீங்கள் படித்தீர்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| எழுவாய் | நீங்கள் | — | — | பன்மை |
| பயனிலை | படித்தீர்கள் | — | — | பன்மை |

எழுவாய்— முன்னிலை இடம், பன்மை எண்.
பயனிலை — ” ”

(3) படர்க்கை இடம்

1. சிதம்பரனூர் பாடினூர் — ஆண்பால்
2. பூங்கோதை பாடினூள் — பெண்பால்
3. சிறுவர்கள் பாடினர் — பலர்பால்
(உயர்திணை)

4. மாடு மேய்ந்தது — ஒன்றன்பால்
5. மாடுகள் மேய்ந்தன — பலவின்பால்
(அஃறிணை)

| | | | திணை | பால் | எண் |
|---|---|---|---|---|---|
| 1. | எழுவாய் | சிதம்பரனூர் | உயர்திணை | ஆண் பால் | ஒருமை |
| | பயனிலை | பாடினூர் | உயர்திணை | ஆண் பால் | ஒருமை |
| 2. | எழுவாய் | பூங்கோதை | உயர்திணை | பெண் பால் | ஒருமை |
| | பயனிலை | பாடினூள் | உயர்திணை | பெண் பால் | ஒருமை |
| 3. | எழுவாய் | சிறுவர்கள் | உயர்திணை | பலர் பால் | பன்மை |
| | பயனிலை | பாடினர் | உயர்திணை | பலர் பால் | பன்மை |
| 4. | எழுவாய் | மாடு | அஃறிணை | ஒன்றன் பால் | ஒருமை |
| | பயனிலை | மேய்ந்தது | அஃறிணை | ஒன்றன் பால் | ஒருமை |
| 5. | எழுவாய் | மாடுகள் | அஃறிணை | பலவின் பால் | பன்மை |
| | பயனிலை | மேய்ந்தன | அஃறிணை | பலவின் பால் | பன்மை |

இவற்றூல் விளங்குவதென்ன?

ஒரு வாக்கியத்தில் எழுவாயும், பயனிலையும் திணை, பால், எண் இடங்களில் ஒத்திருக்க வேண்டும். அதாவது எழுவாய் என்ன திணை, பால், எண், இடமோ, அதே திணை, பால், எண் இடமாகப் பயனிலையும் இருக்கவேண்டும். எழுவாய் தன்மை இடம், ஒருமை எண் என்றூல், பயனிலையும் தன்மை இடமாகவும், ஒருமை எண்ணூகவும் அமைய வேண்டும். எழுவாய் படர்க்கை, ஆண்பால், ஒருமை என்றூல், பயனிலையும் அவ்வாறே இருக்கவேண்டும்.

## (4) சிறப்புப் பொருத்தம்

இவற்றைக் கவனி:—

1. **ஆசிரியர் பாடம் கற்பித்தார்.**
2. **அமைச்சர் கால் நடையாகச் சென்றார்.**
3. **சிதம்பரனார் கப்பலோட்டிய தமிழர்**

ஆசிரியர், அமைச்சர், சிதம்பரனார் என்பவை ஒவ்வொருவரையே குறிக்கும் சொற்களாயினும், சிறப்புக் கருதி, மரியாதையாக வழங்க வேண்டுமாதலால், பன்மை வினைகொண்டு முடிக்கின்றோம். இங்ஙனம் ஒருமைச் சொல்லாயினும் மரியாதை கருதிப் பன்மை வினை கொண்டு முடிப்பது **மரியாதைப் பொருத்தம்** அல்லது **சிறப்புப் பொருத்தம்** என்று கூறப்படும். மேலும் இஃது **மரியாதைப் பன்மை** எனவும் வழங்கப்படும்.

## (5) சொற் பொருத்தம்

கீழ்வருவனவற்றைப் படிக்கவும்: —

1. அவன் நீரைக் **குடித்தான்.**
2. யான் சோறு**ண்டேன்.**
3. சிறுவன் மாம்பழம் **தின்றான்.**

நாம் நீரைக்குடிக்கின்றோம்; சோற்றை உண்கிறோம்; பழத்தைத் தின்கிறோம். இவ்வாறு நாம் பொருத்தமான சொற்களை உபயோகிக்க வேண்டும்.

மேலும் சில உதாரணங்கள்:

1. **கன்றுக் குட்டி**த் துள்ளி ஓடும்.
2. **யானைக்கன்று** பெரியது.

3. **அணிற்பிள்ளை** அழகியது.
4. **பனையோலையில்** எழுதப்பட்டுளது.
5. **மாவிலை** கொண்டு வா.

## வினாக்கள்

1. எழுவாயும் பயனிலையும் எவ்வெற்றில் ஒத்திருக்க வேண்டும்?
2. தந்தை வந்தார்—திருத்தி எழுதுக.
3. சிறப்புப் பொருத்தம் என்றால் என்ன?

# 3. எழுத்துப் பிழைகளும், திருத்தமும்.

### (லகர, ளகர, ழகர, ரகர, றகரப் பிழைகளும், வேறு பிழைகளும்)

நாம் பிழையின்றிப் பேசவும், எழுதவும் பழக வேண்டும். எழுத்துக்களைச் சரியாக உச்சரிக்கப் பழகி விட்டால், எழுதும்போது பிழை நேராது. பேச்சில் லகர, ளகர, ழகர, ரகர, றகர வேறுபாட்டை யறிந்து உச்சரிக்காமையால், எழுதுவதிலும் பிழை ஏற்பட்டு விடுகின்றது.

## (1) லகர, ளகர, ழகரங்கள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | அலி | அளி (இரங்கு) | அழி |
| 2. | அலை | அளை (மலைக்குகை) | அழை |
| 3. | ஆல் (ஆலமரம்) | ஆள் | ஆழ் |
| 4. | இலி (இல்லாதவன்) | இளி | இழி |
| 5. | உலை | உளை (வருந்து) | உழை |
| 6. | ஒலி | ஒளி (வெளிச்சம்) | ஒழி |
| 7. | கலம் (கப்பல்) | களம் | — |
| 8. | கலை | களை | கழை (மூங்கில்) |
| 9. | கிலி (அச்சம்) | கிளி | கிழி |
| 10. | சூல் | சூள் (ஆணை) | சூழ் |
| 11. | உலவு | உளவு | உழவு |
| 12. | — | கிளவி (சொல்) | கிழவி |
| 13. | குலவி | குளவி | குழவி |
| 14. | — | குளம்பு | குழம்பு |

| | | | |
|---|---|---|---|
| 15. | தலை | தளை (கட்டு) | தழை |
| 16. | விலை | விளை | விழை (விரும்பு) |
| 17. | வால் | வாள் | வாழ் |
| 18. | வலி | வளி (காற்று) | வழி |
| 19. | கல் | கள் | — |
| 20. | — | வாளை (மீன்) | வாழை |

மாலையில் **உலவுதல்** உடலுக்கு நல்லது.

ஒற்றன் பகைவரது பாசறைக்குச் சென்று **உளவு** அறிந்து வந்தான்.

**உழவுத்** தொழில் மேன்மையானது.

| | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 1. | **ம**லை பெய்தது | **ம**ழை பெய்தது. |
| 2. | **க**லை பொருந்திய முகம் | **க**ளை பொருந்திய முகம். |
| 3. | **நாலும் கிளமையும் நளிந்தோர்க்கில்லை** | **நாளும் கிழமையும் நலிந்தோர்க்கில்லை.** |
| 4. | **வாளைப் பளம்** | **வாழைப்பழம்** |
| 5. | **நாலைக்கு** வா | **நாளைக்கு** வா. |

(2) ரகர, றகர வேறுபாடுகள் :

சொற்களில் ரகரத்திற்குப் பதிலாக றகரத்தையும், றகரத்திற்குப் பதிலாக ரகரத்தையும் எழுதுவதால் சொற்பொருளே வேறுபடுகின்றது.

1. புலவர் **கூர்ந்து** நோக்கினார்.

அவர் **கூறியவை** யாவரையும் மகிழ்வித்தன.

2. மரக்கலம் பரவைமீது சென்றது.
சில பறவைகள் இனிமையாகப் பாடும்.

3. எளியாரை வலியார் வருத்துதல் தகாது.
அவன் கடலைக்காயை வறுத்தான்.

**ர-ற வரும்போது பொருள் வேறுபடும் சொற்கள் சில :—**

1. அரம்—இரும்பைத் தேய்க்கும் கருவி
அறம்—தருமம், நீதி
2. அரி—திருமால், சிங்கம், அரித்தல்
அறி—தெரிந்துகொள்
3. அருந்து—உண்
அறுந்து—அறுபட்டு
4. அரை—பாதி, இடை
அறை—வீட்டில் உள்ள அறை; அடி
5. இரத்தல்—வேண்டுதல்; பிச்சையெடுத்தல்
இறத்தல்—சாதல்
6. இரங்குதல்—மனமிரங்குதல்
இறங்குதல்—கீழிறங்குதல்
7. இரை—விலங்குணவு, தீனி, ஒலி
இறை—அரசன், கடவுள், சிதறு, கப்பம்
8. உரை—சொல், தேய்
உறை—இறுகு, பை
9. எரி—தீ, நெருப்பு
எறி—வீசு
10. ஏரி—பெரிய நீர் நிலை
ஏறி—(மேலே) ஏறி

11. கருத்து—எண்ணம்
கறுத்து—கோபித்து

12. கருப்பு—பஞ்சம்
கறுப்பு—கருமை நிறம்

13. கரை—ஓரம், குளக்கரை
கறை—களங்கம், குற்றம்

14. குரங்கு—ஒரு விலங்கு
குறங்கு—தொடை

15. கூரிய—கூர்மையான
கூறிய—சொல்லிய

16. குரவர்—பெற்ருேர், ஆசிரியர்
குறவர்—குறிஞ்சி நில மக்கள்

17. கோரல்—விரும்புதல், வேண்டுதல்
கோறல்—கொல்லுதல்

18. திரை—அலை, திரைச்சீலை
திறை—கப்பம்

19. நரை—வெளுத்த மயிர்
நறை—தேன், வாசனை

20. மரை—மான், தாமரை
மறை—ஒளித்தல், வேதம்

மேற்கண்ட எடுத்துக் காட்டுகளிலிருந்து, சொற்களின் எழுத்துக்கள் மாறுவதால், அவற்றின் பொருள் மாறுபடும் என்பதை அறிகிருேம்.

(3) ணகர, னகர பேதங்கள் :

சொற்களில் ணகரத்திற்குப் பதில் னகரத்தையும், னகரத்திற்குப் பதில் ணகரத்தையும் எழுதுவதால் பொருள் மாறுபடும்.

சில உதாரணங்கள்:—

| | | |
|---|---|---|
| 1. | ஆண் | ஆன் (பசு) |
| 2. | அண்ணம் (மேல்வாய்) | அன்னம் |
| 3. | ஊண் (உணவு) | ஊன் (மாமிசம்) |
| 4. | காண் (பார்) | கான் (காடு) |
| 5. | கணம் (காலம்) | கனம் (பளுவுள்ளது) |
| 6. | கண்ணன் | கன்னன் |
| 7. | தண்மை (குளிர்ச்சி) | தன்மை (இயல்பு) |
| 8. | பாணம் (அம்பு) | பானம் |
| 9. | மண் | மன் (அரசன்) |
| 10. | மணம் | மனம் |

**ஆன்**பால் மிகச் சிறந்த உணவு.

சிறுவர் **கான்** சென்று மீண்டனர்.

**மன்னன் மண்**ணாசையால் போர் தொடுத்தான்.

**மண**முள்ள மலரை மாந்தர் நாடுவர்.

**மன**நோய் பலக்குறைவு.

(4) வேறு பிழைகள் :

1. உண்டான்; கண்டேன் :

டகரத்திற்கு முன் முச்சுழி ணகரமே வரும். இரு சுழி னகரம் வருவது பிழை.

2. வந்தாள்; நடந்தான் :

தகரத்திற்கு முன் தந்நகரமே வரும்; இருசுழி னகரமோ, முச்சிழி ணகரமோ வரா.

3. சென்றான்; நின்று :

வல்லின றகரத்திற்கு முன் றன்னகரமாகிய இரு சுழி ன் தான் வரும்.

4. அற்பம், நட்பு.

வல்லின றகத்திற்குப் பின் புள்ளி எழுத்து வராது. இடையின் ரகத்திற்குப்பின் புள்ளி எழுத்து வரும்.

பார்ப்பார், கார்க்காலம்.

## பிழைபட எழுதப்படும் சில சொற்களும், திருத்தங்களும் :

| பிழை | திருத்தம் |
|---|---|
| அடமழை | அடைமழை |
| அதுகள் | அவை |
| அமக்களம் | அமர்க்களம் |
| ஆத்துக்கு | அகத்துக்கு |
| ஆக்ஷி | ஆட்சி |
| இடது | இடம் |
| இமையமலை | இமயமலை |
| உத்திரவு | உத்தரவு |
| எடஞ்சல் | இடைஞ்சல் |
| எண்ணை | எண்ணெய் |
| ஒண்டியாய் | ஒன்றியாய் |
| ஒருவள் | ஒருத்தி |
| கடகால் | கடைக்கால் |
| கட்டிடம் | கட்டடம் |
| கண்ணாலம் | கலியாணம் |
| கினவு | கனவு, கனா |
| குடக்கூலி | குடிக்கூலி |
| குத்துயிர் | குற்றுயிர் |
| கேழ்வி | கேள்வி |
| கோர்த்து | கோத்து |

| | |
|---|---|
| சந்தணம் | சந்தனம் |
| சாற்றுக்கவி | சாத்துக்கவி |
| சிகப்பு | சிவப்பு |
| சிலவு | செலவு |
| சீக்காய் | சிகைக்காய் |
| சுவற்றில் | சுவரில் (சுவர்-பகுதி) |
| தலகாணி | தலையணை |
| தாவாரம் | தாழ்வாரம் |
| திரேகம் | தேகம் |
| தீவாளி | தீபாவளி |
| துகையல் | துவையல் |
| துகை | தொகை |
| துடங்குதல் | தொடங்குதல் |
| துளிர் | தளிர் |
| துறவுகோல் | திறவுகோல் |
| தெண்டனை | தண்டனை |
| தொந்திரவு | தொந்தரவு |
| தொப்புள் | கொப்பூழ் |
| நஞ்சை | நன்செய் |
| நிகளம் | நீளம் |
| நேத்து | நேற்று |
| நோம்பு | நோன்பு |
| பயிறு | பயறு |
| பாவக்காய் | பாகற்காய் |
| புஞ்சை | புன்செய் |
| புட்டு | பிட்டு |
| புழக்கடை | புழைக்கடை |

| | |
|---|---|
| மாக்ஷி | மாட்சி |
| முந்தாணி | முன்தானை |
| முயற்சித்தான் | முயன்றான் |
| முகர்ந்து | மோந்து |
| ரங்கன் | அரங்கன் |
| வயறு | வயிறு |
| வலது | வலம் |
| விசிரி | விசிறி |
| விரை | விதை |
| வெங்கலம் | வெண்கலம் |
| வெண்ணை | வெண்ணெய் |
| வென்னீர் | வெந்நீர் |
| வேணும் | வேண்டும் |
| வைக்கல் | வைக்கோல் |

## வினாக்கள்

**1.** அமக்களம், உத்திரவு, குடக்கூலி, சிகப்பு, வெங்கலம், முயற்சித்தேன், பயிறு—இவற்றைப் பிழையின்றித் திருத்தி எழுதுக.

**2.** நிரப்பு :—

1. —யிலிருந்து தண்ணீர் பாய்கிறது. (ஏரி, ஏறி)
2. பிள்ளைகள்—சொற்கேட்டு நடத்தல் நன்று. (குறவர், குரவர்)
3. ஆடையில்—படிந்துள்ளது. (கரை, கறை)

**3.** ஊன், ஊண்—இவற்றின் வேறுபாட்டை விளக்க வாக்கியங்கள் எழுது.

# 4. வாக்கிய முடிவுப் பிழைகளும், திருத்தமும்.

1. **கந்தன் வந்தது ;** எழுவாய் உயர்திணை; அஃறிணை முடிபு கொடுக்கப்பட்டிருக்கிறது—பிழை.

**கந்தன் வந்தான்**—என உயர்திணை ஆண்பால் வினைமுற்றால் முடிக்கவேண்டும்.

2. **அவன் செய்தேன் :** எழுவாய்—படர்க்கை ; தன்மை முடிபு கொடுக்கப்பட்டுளது பிழை. **அவன் செய்தான்**—என படர்க்கை வினையால் முடிப்பது சரியாகும்.

3. **நாளை மழை பெய்தது :** இதில் எதிர் காலத்திற்கு இறந்தகால முடிபு கொடுக்கப்பட்டிருக்கிறது—பிழை.

**நாளை மழை பெய்யும்**—என எதிர் காலப் பயனிலையால் முடிக்க.

4. **குதிரைகள் வந்தது :** பன்மை எழுவாய்க்கு ஒருமை முடிபு கொடுக்கப்பட்டது—பிழை. **குதிரைகள் வந்தன**—என பன்மை முடிபு கொடுக்கவும்.

5. **அம்மையார் வந்தாள் :** எழுவாய்—மரியாதைப் பன்மை ; ஒருமை முடிபு பிழை. **அம்மையார் வந்தார்**—என முடிப்பது சரி.

6. **தம்பியொடு அண்ணன் சென்றான்: உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த 'ஒடு' என்னும்**

மூன்றும் வேற்றுமை யுருபை தம்பியொடு சேர்த்துக் கூறியது பிழை.

அண்ணனொடு தம்பி சென்றான்—சரி.

மேற்கண்டவாறு எழுவாயும், பயனிலையும் திணை, பால்,எண், இடம் ஆகியவைகளில் ஒத்திருக்கவேண்டும். எழுவாய் உயர்திணையாயின், பயனிலையும் உயர்திணையா யிருத்தல் வேண்டும். எழுவாய் அஃறிணையாயின், பயனிலையும் அத்திணையாயிருத்தல் வேண்டும். எழுவாய் ஒருமை எண்ணாயின், பயனிலையும் அவ்வாறே அமைய வேண்டும். எழுவாய் பன்மை எண்ணாயின், பயனிலையும் பன்மை எண்ணாக இருத்தல் வேண்டும். எழுவாய் ஆண்பாலாயின், பயனிலையும் அப்பாலில் இருத்தல் வேண்டும். எழுவாய் தன்மை இடமாயின், பயனிலை யும் தன்மையிட மாயும், எழுவாய் முன்னிலை இடமா யின், பயனிலையும் முன்னிலையிடமாயும், எழுவாய் படர்க்கை இடமாயின், பயனிலையும் படர்க்கையிட மாயும் இருத்தல் வேண்டும். இவற்றோடு காலப்பிழை யும் நேராமல் கவனித்து வாக்கியங்களை அமைக்க வேண்டும்.

வாக்கியப் பொருத்தம் என்ற பகுதியில் கூறப்பட்ட வற்றை நினைவிற்குக் கொண்டு வரவும்.

## வினாக்கள்

1. ஒவ்வொரு மாணவனும் படித்தார்கள்—இவ்வாக்கியம் சரியா? அன்றெனின் திருத்தி வரைக.
2. சிறப்புப் பொருத்தத்திற்கு இரு எடுத்துக் காட்டுகள் கொடு.

# 5. வாக்கிய மாற்றம்

வாக்கியங்கள் பலவகைப்படும். வாக்கியங்களைச் செய்தி வாக்கியம், வினாவாக்கியம், எதிர்மறை வாக்கியம், உணர்ச்சி வாக்கியம் எனவும், தனிவாக்கியம், தொடர் வாக்கியம், கலவை வாக்கியம் எனவும் வகைப் படுத்தலாம்.

ஒருவகை வாக்கியத்தைப் பொருள் கெடாமல் வேறுவகை வாக்கியமாக மாற்றலாம். இவ்வாறு வாக்கியங்களை மாற்றியமைக்கும் பயிற்சி மாணவர்க்கு மொழியில் சிறந்த பயிற்சியை உண்டாக்கும்.

## (1) செய்தி வாக்கியங்களை வினாவாக்கியங்களாக மாற்றுதல்:

ஆசிரியர் மாணவர்க்கு நல்லறிவு புகட்டினார்.
உடற் பயிற்சி நன்மை தரும்.
இளமையில் வறுமை கொடிது.

இச்செய்தி வாக்கியங்களைக் கீழ்க் குறித்தவாறு வினா வாக்கியங்களாக மாற்றலாம்.

ஆசிரியர் மாணவர்க்கு நல்லறிவு புகட்டினாரா?
உடற் பயிற்சி நன்மை தருமா?
இளமையில் வறுமை கொடிதா?

இவ்வாறே வினாவாக்கியங்களையும் செய்தி வாக்கியங்களாக மாற்றலாம்.

## (2) உடன்பாட்டு வாக்கியம், எதிர்மறை வாக்கியம்:

ஆசிரியர் கூறியவற்றை உளத்தில் இருத்து.

இது குளிர் காலம்.

தீயாரைக் காண்பதுவும் தீது.

இவ்வுடன்பாட்டு வாக்கியங்களைக் கீழ்க்கண்டவாறு எதிர்மறை வாக்கியங்களாக மாற்றியமைக்கலாம்.

ஆசிரியர் கூறியவற்றை மறவற்க.

இது கோடைக் காலம் அன்று.

தீயாரைக் காண்பதுவும் நன்றன்று.

இவ்வாறு பொருள் கெடாமல் மாற்றியமைப்பது சிறப்பாகும். எதிர்மறை வாக்கியங்களையும் இங்ஙனமே உடன் பாட்டு வாக்கியங்களாக மாற்றி அமைக்கலாம்.

## (3) உணர்ச்சி வாக்கியம், செய்தி வாக்கியம்:

ஆ, இவர் எத்தகைய பேரறிஞர்!

என்ன அழகான காட்சி!

ஓ, ஓ இவன் கொடியன்!

மேற்கண்ட உணர்ச்சி வாக்கியங்களைக் கீழ்க்கண்டவாறு செய்தி வாக்கியங்களாக மாற்றி யமைக்கலாம்.

இவர் மிகப் பேரறிஞர்.

இஃது மிகவும் அழகான காட்சி.

இவன் மிகக் கொடியவன்.

இவ்வாறு செய்தி வாக்கியங்களையும் பொருள் கெடாமல் உணர்ச்சி வாக்கியங்களாக மாற்றி எழுதலாம்.

## (4) செய்வினை, செயப்பாட்டு வினை:

பாண்டியர் தமிழ்ச் சங்கத்தைப் போற்றி வளர்த்தனர்.

அரசன் புலவர்க்குப் பரிசில் **கொடுத்தான்.**

செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் **கட்டினன்.**

இச்செய்வினை வாக்கியங்களைக் கீழ்க்கண்டவாறு செயப்பாட்டு வினைகொண்ட வாக்கியங்களாக மாற்றி அமைக்கலாம்.

தமிழ்ச்சங்கம் பாண்டியரால் போற்றி **வளர்க்கப்பட்டது.**

அரசனால் புலவர்க்குப் பரிசில் **கொடுக்கப்பட்டது.**

செங்குட்டுவனால் கண்ணகிக்குக் கோயில் **கட்டப்பட்டது.**

செய்வினை கொண்ட வாக்கியத்தைச் செயப்பாட்டு வினைகொண்ட வாக்கியமாக மாற்றியமைக்கும்போது ஏற்படும் மாறுதல்கள் :

(1) செயப்படுபொருள் முதல் வேற்றுமையாகும். (எழுவாயாக மாறும்.)

(2) எழுவாய் மூன்றும் வேற்றுமை கருத்தாப் பொருளாக மாறும். (ஆல் என்னும் உருபை ஏற்கும்)

(3) வினைப்பகுதி **படு** என்னும் துணை வினையுடன் சேர்ந்து ஏற்றவாறு முடியும்.

இவ்வாறே செயப்பாட்டு வினை கொண்ட வாக்கியத்தைப் பொருள் கெடாமல் செய்வினை கொண்ட வாக்கியமாக மாற்றியமைக்கலாம்.

## (5) தனிவாக்கியங்களைத் தொடர் வாக்கியமாக மாற்றி அமைத்தல் :

பொன்னன் சென்னைக்குச் சென்றான்.

பொன்னன் கல்லூரியை அடைந்தான்.

பொன்னன் முதல்வரைக் கண்டு பேசினான்.
பொன்னன் கல்லூரியில் இடம் பெற்றான்.

மேற்கண்ட தனிவாக்கியங்களிலுள்ள வினைமுற்றுக்களை வினையெச்சங்களாக்கி, ஒரே தொடர் வாக்கியமாக மாற்றி, பெற்றான் என்னும் பயனிலையைக் கொண்டு முடிக்கலாம்.

பொன்னன் சென்னைக்குச் சென்று, கல்லூரியை அடைந்து, முதல்வரைக் கண்டு பேசி, இடம் பெற்றான்—இது தொடர் வாக்கியம்.

எனவே தனிவாக்கியங்களைத் தொடர்வாக்கியமாக மாற்றுகையில், ஒரே எழுவாயை வைத்துக் கொண்டு, இறுதிப் பயனிலை தவிர மற்றப் பயனிலைகளை வினையெச்சங்களாக மாற்றி, ஈற்றுப் பயனிலையுடன் முடிக்க வேண்டும்.

## (6) தொடர் வாக்கியத்தைத் தனி வாக்கியங்களாக மாற்றி அமைத்தல்:

புலவர் பாரியை அடைந்து, புகழ்ந்து பாடிப்
பரிசில் பெற்று, மகிழ்ந்தார்.

இஃது ஒரு தொடர் வாக்கியம். புலவர் என்ற எழுவாயுடன், அடைந்து, பாடி, பெற்று என்னும் வினையெச்சங்களை முற்றாக்கிப் பயனிலையாகக் கூட்டினால் தனித்தனி வாக்கியங்களாகும்.

புலவர் பாரியை அடைந்தார்.
புலவர் பாரியைப் புகழ்ந்து பாடினார்.
புலவர் பரிசில் பெற்றார்.
புலவர் மகிழ்ந்தார்.



இவ்வாறு நான்கு தனிவாக்கியங்களாயின. எனவே ஒரு தொடர் வாக்கியத்தைத் தனி வாக்கியங்களாக

மாற்ற வேண்டுமாயின், வினையெச்சங்களை வினைமுற்றுக் களாக்கி, எழுவாயை ஒவ்வொன்றுக்கும் கூட்டிக் கொள்ள வேண்டும்.

(7) தனி வாக்கியங்களைக்
கலவை வாக்கியமாக மாற்றுதல்:

1. மாணவன் ஊக்கத்தோடு படித்தான்.
2. ஆதலால் ஆண்டுத் தேர்வில் வெற்றி பெற்ருன்.

மேற்கண்ட இரு வாக்கியங்களையும் கீழ்க்கண்ட வாறு ஒரு கலவை வாக்கியமாக மாற்றி அமைக்கலாம்.

மாணவன் ஊக்கத்தோடு படித்ததனுல், ஆண்டுத் தேர்வில் வெற்றி பெற்ருன்.

தனிவாக்கியங்களைக் கலவை வாக்கியமாகமாற்றி யமைக்க, ஏற்ற இடைச் சொல் கொண்டு சேர்க்க வேண்டும்.

(8) கலவை வாக்கியத்தைத் தனிவாக்கியங்
களாக மாற்றி அமைத்தல்:

முருகன் பள்ளிக்கு வரவில்லை யென்று ஆசிரியர் என்னிடம் கூறினுர்.

இது ஒரு கலவை வாக்கியம். இதனைக் கீழ்க்கண்ட வாறு இரு தனி வாக்கியங்களாக மாற்றி எழுதலாம்.

1. முருகன் பள்ளிக்கு வரவில்லை.
2. ஆசிரியர் என்னிடம் கூறினுர்.

கலவை வாக்கியத்தில் வந்துள்ள **என்று** என்னும் சொல்லை நீக்கிவிட்டு, இரு தனி வாக்கியங்களாக மாற்றி எழுதப்பட்டன.

# வினாக்கள்

1. கீழ்வரும் உடன்பாட்டு வினை கொண்ட வாக்கியங்களைப் பொருள் கெடாமல் எதிர்மறை வாக்கியங்களாக்குக :—

    1. நேற்று மழை பெய்தது.
    2. உயிர்கள் உணவின்றேல் இறந்து போம்.
    3. கற்றதைக் கருத்தில் இருத்து.
    4. ஆசிரியர் சொற்படி நட.
    5. இயற்கையோடு இயைந்து வாழ்க.

2. செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாகவும், செயப்பாட்டு வினை வாக்கியங்களைச் செய்வினை வாக்கியங்களாகவும் மாற்றி எழுதுக :—

    1. திருவள்ளுவர் திருக்குறளை இயற்றினர்.
    2. இராச ராச சோழனால் தஞ்சைப் பெரிய கோயில் கட்டப்பட்டது.
    3. இவ்வீடு மழையால் அழிக்கப்பட்டது.
    4. கண்ணகி மதுரையை எரித்தாள்.
    5. ஆங்கிலேயர் ஒரு கோட்டையைக் கட்டினர்.
    6. இவ்வோவியம் என்னால் வரையப்பட்டது.

3. கீழ்வரும் தொடர் வாக்கியங்களைத் தனிவாக்கியங்களாக மாற்றி அமைக்கவும் :

    1. யான் கடைக்குச் சென்று, விலை பேசி, ஒரு புத்தகத்தை வாங்கினேன்.
    2. இளம்பன் மதுரைக்குச் சென்று, தன் நண்பனைக் கண்டு, உரையாடி, மீண்டான்.
    3. நந்தனர் தில்லையை அடைந்து, இறைவனை வணங்கி, முத்தி பெற்றார்.
    4. நியூட்டன் இருபது ஆண்டுகளாக ஆராய்ந்து கண்டறிந்த உண்மைகள் எழுதப்பட்ட ஏடுகள் மேஜை மீது கிடந்தன.

5. கோவலன் தன் சிலம்பை விற்கக் கருதி, மதுரையை அடைந்து, பொற் கோவலனைக் கண்டு, தான் வந்த காரியத்தைக் கூறினான்.

4 கீழ்வரும் தனிவாக்கியங்களைக் கலவை வாக்கியங்களாக மாற்றுக :—

1 நல்லார் நட்பை நாடு.
தந்தை இவ்வாறு கூறினர்.

2. அவன் வயதில் இளையவன்.
அவன் வயதில் முதியவன்.

3. முறையாகக் கல்.
அறிவில் தேர்ச்சி பெறுவாய்.

4. ஆசிரியர் பல அறவுரைகள் கூறினர்.
மாணவன் அவற்ருல் பயனடையவில்லை.

5. எண்ணும் எழுத்தும் கண்ணெத்தகும்.
இ∴து ஔவையார் வாக்கு.

# 6: நிறுத்தக் குறிகள்

நாம் வாசிக்கும் போது, பொருள் விளங்குவதற்காகச் சில இடங்களில் நிறுத்தியும், மகிழ்ச்சி, சினம், விருப்பம், துன்பம், இரக்கம் முதலிய உணர்ச்சிகள் விளங்கும்படியும் படிக்கவேண்டும். இவ்வாறு படிக்க உதவியாயிருக்கும் பொருட்டுச் சில குறிகள் உரிய இடங்களில் இடப்பட்டுள்ளன. அவை நிறுத்தக் குறிகள் என்று வழங்கப்படும். நிறுத்தக் குறிகள், முற்றுப் புள்ளி, முக்காற் புள்ளி, அரைப் புள்ளி, காற் புள்ளி, வினுக்குறி, வியப்புக் குறி, மேற்கோள் குறி எனப் பல வகைப்படும்.

## (1) முற்றுப் புள்ளி

(.) இஃது முற்றுப்புள்ளி. இப்புள்ளி வரும் இடங்களில் நான்கு மாத்திரை நேரம் நிறுத்தல் வேண்டும். ஒரு முறை இயல்பாகக் கண்ணிமைக்கும் நேரம் அல்லது கைந்நொடிக்கும் நேரம் ஒரு மாத்திரையின் அளவாகும்.

1. முகம் நக நட்பது நட்பன்று.

2. உலகம் ஓர் அழகிய பூஞ்சோலை. பல திறப்பட்ட மக்கள் இதில் வாழ்கின்றனர். பல பெரியோர் மக்களின் உயர்வுக்குப் பாடுபட்டனர்.

3. திரு. வி. க; வ. உ. சிதம்பரம் பிள்ளை. கி.மு. மூன்றும் நூற்றுண்டு.

முற்றுப்புள்ளி வாக்கியம் முடிந்ததைக் காட்டும். வாக்கியத்தின் முடிவிலும், சொற்களைச் சுருக்கிச் சொல்லும் இடங்களிலும் இப்புள்ளியை இடவேண்டும்.

## (2) முக்காற் புள்ளி

(:) இஃது முக்காற்புள்ளி. இஃது ஒரு சிறிய கோட்டுடன் ( :— ) இவ்வாறும் எழுதப்படும். இக்குறி இடப்பட்டுள்ள இடங்களில் மூன்று மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்,

1. வள்ளுவர் கூறுகின்றார் :— " கற்கக் கசடறக் கற்பவை."

2. தமிழ் எழுத்துக்கள் நான்கு வகைப்படும். அவை யாவன :— உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் என்பன.

ஒரு மேற்கோளை எடுத்துக் கூறவும், அடுக்காகச் சொற்களைக் கூறவும் இக்குறி பயன்படுகின்றது.

## (3) அரைப்புள்ளி

(;) இஃது அரைப்புள்ளி. இக் குறியுள்ள இடங்களில் இரண்டு மாத்திரை நேரம் நிறுத்தல் வேண்டும்.

1. அவர் தேர்வில் வெற்றி அடைந்தார் ; சட்ட மன்ற உறுப்பினர் ஆனர் ; மக்கட்குப் பல நன்மைகள் செய்தார்.

2. பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை ; அருளிலார்க்கு அவ்வுலக மில்லை.

ஒரு எழுவாய்க்குப் பல தொழில்களை ஏற்றிக் கூறும்போது, ஒவ்வொரு பயனிலையின் இறுதியிலும்

அரைப்புள்ளியும், வாக்கிய முடிவில் முற்றுப்புள்ளியும் இடுகின்றோம்.

(4) காற்புள்ளி

(,) இஃது காற்புள்ளி. இக்குறி இடப்பட்டுள்ள இடங்களில் ஒரு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

1. பல பெயர்ச் சொற்கள் வரிசையாக வரும் போது, கடைசி யொழிந்த மற்றவைகளை அடுத்துக் காற்புள்ளி இடவேண்டும்.

(1) உறுதிப் பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என நான்காம்.

(2) படை, குடி, நட்பு, அமைச்சு, அரண், கூழ் ஆறும் உடையவன் அரசன்.

2. பெயர்ச் சொற்கள் அடுக்கடுக்காக வரும் போது, அவைகளைப் பிரித்துக் காட்ட, காற்புள்ளி இடுகின்றோம்.

(1) செல்வமும் வறுமையும், ஆக்கமும் தாழ்வும், இன்பமும் துன்பமும், அடுத்தடுத்து வரும்.

(2) கோவலன் அழகும் ஆண்மையும், ஈகையும் இரக்கமும், மென்மையும் மேன்மையும் உடையவன்.

3. விளிப் பெயர்க்கு முன் காற்புள்ளி இட வேண்டும்.

(1) மகனே, விளையாடச் செல்.

(2) ஆசிரியரே, அமருங்கள்.

4. சில கருத்துக்கள் அல்லது தனி வாக்கியங்கள் சேர்ந்து வரும்போது, அவற்றைப் பிரித்துக் காட்டக் காற்புள்ளி இடவேண்டும்.

(1) ஆசிரியர் வகுப்புக்குச் சென்று, பாடம் கற்பித்து, மணியடித்தபின் மீண்டார்.

(2) நாளை முதலமைச்சர் இவ்வூருக்கு வருவாரென்றும், பள்ளியின் புதுக் கட்டடத்தைத் திறந்து வைப்பாரென்றும், பிறகு சேலத்திற்குச் செல்வாரென்றும் அறிந்தேன்.

5. மேற்கோள் குறி அடங்கிய வாக்கியத்திற்குப் பின் காற்புள்ளி வரும்.

'ஊக்கமது கைவிடேல்', என்று ஔவையார் கூறியுள்ளார்.

## (5) வினாக்குறி

(?) இஃது வினாக்குறி. வினா வாக்கியத்தின் இறுதியில் முற்றுப்புள்ளிக்குப் பதிலாக இக்குறியை இட வேண்டும். இக்குறி இடப்பட்டுள்ள இடத்தில் நான்கு மாத்திரை நேரம் நிறுத்தலாம்.

1. கற்றதனால் ஆய பயன் என்கொல்?
2. கந்தன் இன்று பள்ளிக்கு வந்தானா ?

## (6) உணர்ச்சிக்குறி

(!) இஃது உணர்ச்சிக்குறி.

அ ஆ! எவ்வளவு நுண்ணிய வேலை !—வியப்பு.

அந்தோ! இரங்கத்தக்கான்! — இரக்கம்.

முருகா! மனமிரங்கு ! — வேண்டுகோள்.

போற்றி, போற்றி, சய சய, போற்றி!—வாழ்த்து.

வியப்பு, மகிழ்ச்சி, அச்சம், இரக்கம் முதலிய உணர்ச்சிகளைக் குறிக்க இக்குறியை இடுகின்றோம்.

## (7) மேற்கோள் குறி

(“—”) இஃது மேற்கோள் குறி. ஒருவர் கூறிய சொற்களை அப்படியே எடுத்தாளும் போதும், செய்யுட்களையும் பழமொழிகளையும் உரை நடையில் உபயோகிக்கும் போதும் அவற்றை மேற்கோள் குறிகளின் இடையில் வைத்து எழுதவேண்டும்.

1. விகடன் அரசனை நோக்கி, “எனக்கு உயிர்ப் பிச்சை அளிக்க வேண்டும்,” என வேண்டினான்.
2. மாணவன், “நான் விளையாடினேன்,” என்றான்.
3. “அணியெல்லாம் ஆடையின் பின்,” என்பது பழமொழி.

## வினாக்கள்

உரிய இடங்களில் நிறுத்தக் குறிகளை இடுக :—

1. நிலனும் நீரும் தீயும் வளியும் வானும் என பூதம் ஐந்து
2. மடக்கொடி நீ யார்
3. கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று என்று அரசன் கூறினான்
4. பாண்டவர் நாடு நகரங்களை இழந்து காட்டையடைந்து பல ஆண்டுகள் கழித்து மீண்டனர்

5. வானம் பொழிந்தது நாடு செழித்தது மக்கள் மகிழ்ந்தனர் மன்னனை வாழ்த்தினர்
6. அ ஆ எவ்வளவு உயர்ந்த மரம்
7. மாரி பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி
8. சீ சீ என்ன கொடிய செயல்
9. யாது ஊரே யாவரும் கேளிர் தீதும் நன்றும் பிறர் தர வாரா
10. மழை பெய்யாவிடினும் பஞ்சம் வந்தாலும் நாட்டில் தீச் செயல்கள் மிகுந்தாலும் குடிகள் அரசனைத் தூற்றுவார்கள்

# 7. வல்லெழுத்து மிகும் இடங்களும், மிகா இடங்களும்.

## 1. வல்லெழுத்து மிகும் இடங்கள்

(1) அ + குன்று = அக்குன்று
இ + சிறுவன் = இச்சிறுவன்
எ + பாய் = எப்பாய்?

அ, இ முதலிய சுட்டெழுத்துக்கள் முன்னும், எ என்னும் வினவெழுத்தின் முன்னும் வரும் வல்லினம் மிகும்.

(2) அந்த + தலையணை = அந்தத்தலையணை
இந்த + கோலம் = இந்தக்கோலம்
எந்த + பறவை = எந்தப்பறவை?

அந்த, இந்த என்னும் சுட்டுச் சொற்களின் முன்னும், எந்த என்னும் வினா முன்னும் வரும் வல்லினம் மிகும்.

(3) அப்படி + சொன்னார் = அப்படிச்சொன்னார்.
இப்படி + போ = இப்படிப்போ.
எப்படி + தாண்டினான் = எப்படித்தாண்டினான்?

அப்படி, இப்படி, எப்படி ஆகிய சொற்களின் முன் வல்லினம் மிகும்.

(4) அங்கு + போ = அங்குப்போ
இங்கு + பார் = இங்குப்பார்
எங்கு + சென்றாய் = எங்குச்சென்றாய்?
ஈண்டு + கண்டேன் = ஈண்டுக்கண்டேன்.

அங்கு, இங்கு, எங்கு என்னும் இடப் பெயர்கள் முன்வரும் வல்லினம் மிகும். இவை குற்றுகர ஈற்றை யுடைய இடப் பெயர்கள்.

(5) பாடத்தை + படித்தான் = பாடத்தைப் படித்தான்.

வீட்டை + தேடினான் = வீட்டைத்தேடினான்.

ஆசிரியரை + கண்டேன் = ஆசிரியரைக்கண்டேன்.

இவ்வாறு இரண்டாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடரில் வல்லினம் மிகும்.

(6) வீட்டுக்கு + சென்றான் = வீட்டுக்குச் சென்றான்.

பாடலுக்கு + பரிசு = பாடலுக்குப் பரிசு

நாட்டுக்கு + தேவை = நாட்டுக்குத்தேவை.

நான்காம் வேற்றுமை விரியில் வல்லினம் மிகும்.

(7) தயிர் + குடம் = தயிர்க்குடம்.

மலர் + சோலை = மலர்ச் சோலை.

இரண்டாம் வேற்றுமை உருபும், பயனும் உடன் தொக்க தொகையில் வல்லினம் மிகும்.

(8) பாக்கு + கொடு = பாக்குக் கொடு.

அச்சு + தாள் = அச்சுத்தாள்.

எட்டு + கால் = எட்டுக்கால்.

பத்து + தலை = பத்துத்தலை.

செப்பு + குடம் = செப்புக் குடம்.

கற்று + தேர் = கற்றுத் தேர்.

வன்றொடர்க் குற்றியலுகரத்தின் முன் வரும் வல்லினம் மிகும்.

(9) நிலா + சோறு = நிலாச் சோறு
கிளி + குஞ்சு = கிளிக் குஞ்சு
தீ + குளித்தான் = தீக்குளித்தான்.
இருக்க + சொல் = இருக்கச் சொல்

இவ்வாறு உயிரீற்றின் முன் வல்லினம் மிகும்.

(10) ஓடா + குதிரை = ஓடாக் குதிரை
உண்ணு + சோறு = உண்ணுச் சோறு
செய்யா + காரியம் = செய்யாக் காரியம்

இவ்வாறு ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தின் முன் வரும் வல்லினம் மிகும்.

(11) போய் + சேர்ந்தான் = போய்ச் சேர்ந்தான்.
ஆட + சென்றுள் = ஆடச் சென்றுள்.
இன்றி + செய்யான் = இன்றிச் செய்யான்.
நன்றுய் + பாடினுள் = நன்றுய்ப் பாடினுள்.

இவ்வாறு சில வினையெச்சங்களின் முன் வல்லினம் மிகும்.

(12) ஈ + கால் = ஈக் கால்
பூ + பந்து = பூப் பந்து
கோ + செங்கணன் = கோச் செங்கணன்
தீ + கொடுமை = தீக் கொடுமை

இவ்வாறு ஓரெழுத்தொரு மொழிகளுக்கு முன்னுல் வரும் வல்லினம் மிகும்.

(13) புது + குடம் = புதுக்குடம்
புது + தட்டு = புதுத்தட்டு

இவ்வாறு பண்புத் தொகையில் வல்லினம் மிகும்.

(14) சாரை + பாம்பு = சாரைப் பாம்பு

இவ்வாறு இரு பெயரொட்டுப் பண்புத்தொகையில் வல்லினம் மிகும்.

(15) கனா + கண்டேன் = கனாக்கண்டேன்
இரா + பகல் = இராப்பகல்
நடு + தெரு = நடுத்தெரு
கணு + கால் = கணுக்கால்

இவ்வாறு குறிலைச்சார்ந்து வரும் ஆகாரம், குறிலைச் சார்ந்து வரும் முற்றியலுகரங்கள் முதலியவற்றின் முன்னால் வரும் வல்லினம் மிகும்.

## 2. வல்லினம் மிகா இடங்கள்

(1) ஈற்று வினா முன்

பின்வரும் உதாரணங்களைக் கவனி :—

அவனா + கொண்டான் = அவனா கொண்டான்?
,, + சென்றான் = அவனா சென்றான்?
,, + தந்தான் = அவனா தந்தான்?
,, + போனான் = அவனா போனான்?
இராமனே + கொண்டான் = இராமனே கொண்டான்?
,, + சென்றான் = இராமனே சென்றான்?
,, + தந்தான் = இராமனே தந்தான்?
,, + போனான் = இராமனே போனான்?
கந்தனோ + கொண்டான் = கந்தனோ கொண்டான்?
,, + சென்றான் = கந்தனோ சென்றான்?
,, + தந்தான் = கந்தனோ தந்தான்?
,, + போனான் = கந்தனோ போனான்?

யா+குறியன =யா குறியன?

யா+கொண்டான்=யா கொண்டான்?

மேற்காணும் உதாரணங்களிலிருந்து ஈற்று வினுப் பெயர்களுக்கு முன்னும், யா வினு முன்னும் வரும் வல்லினம் (க, ச, த, ப) இயல்பாகும்.

(2) இரண்டாம் வேற்றுமைத் தொகை முன்

பறவை+பிடித்தான்=பறவை பிடித்தான்.

பொருள்+தந்தான்=பொருள் தந்தான்.

புத்தகம்+கொடுத்தான்=புத்தகம் கொடுத்தான்.

நீர்+குடித்தான்=நீர் குடித்தான்.

இவ்வாறு இரண்டாம் வேற்றுமைத் தொகையின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(3) மூன்ரும் வேற்றுமை முன்

கந்தனேடு+சென்ருன்=கந்தனேடு சென்ருன்.

இராமனேடு+பேசினுன்=இராமனேடு பேசினுன்.

சீதையொடு+போனுள்=சீதையொடு போனுள்.

இவ்வாறு மூன்ரும் வேற்றுமை உருபுகளாகிய ஒடு, ஓடு இவற்றின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(4) நான்காம் வேற்றுமைத் தொகை,
உயர்திணைப் பெயர்கள் முன்

கன்னி+கணவன்=கன்னி கணவன்

சிறுவர்+தந்தை=சிறுவர் தந்தை

இவ்வாறு நான்காம் வேற்றுமைத் தொகை உயர் திணைப் பெயர்களின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(5) ஐந்தாம் வேற்றுமையின் முன்

வீட்டிலிருந்து + போனுன் = வீட்டிலிருந்து போனுன்.

ஊரினின்று + சென்ருன் = ஊரினின்று சென்ருன்.

,, + பிரிந்தான் = ஊரினின்று பிரிந்தான்.

இவ்வாறு ஐந்தாம் வேற்றுமை உருபுகளான இருந்து, நின்று என்பவைகளின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(6) ஆரும் வேற்றுமையின் முன்

முருகனது + கை = முருகனது கை

இராமனுடைய + புத்தகம் = இராமனுடைய புத்தகம்

இவ்வாறு ஆரும் வேற்றுமையின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(7) பொதுப் பெயர், உயர்திணைப் பெயர்கள் முன்

சாத்தன் + கை = சாத்தன் கை

கொற்றன் + சிறிது = கொற்றன் சிறிது

பரதன் + கண் = பரதன் கண்

இராமன் + செவி = இராமன் செவி

இவ்வாறு பொதுப் பெயர், உயர்திணைப் பெயர்களின் ஈற்றிலுள்ள னகர வொற்றின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(8) சீதை + பெரியள் = சீதை பெரியள்

வள்ளி + தலை = வள்ளி தலை

சாத்தி + தீயள் = சாத்தி தீயள்
தாய் + பெரியள் = தாய் பெரியள்
அவர் + சிறியர் = அவர் சிறியர்

இவ்வாறு பொதுப் பெயர், உயர்திணைப் பெயர்கள் ஈற்று உயிர் முன்னும், யகர, ரகரங்கள் முன்னும் வரும் வல்லினம் இயல்பாகும்.

(9) அகர ஈற்றுப் பெயரெச்சத்தின் முன்

படித்த + பையன் = படித்த பையன்
ஓடிய + குதிரை = ஓடிய குதிரை
முடிந்த + காரியம் = முடிந்த காரியம்
உண்ணுத + சோறு = உண்ணுத சோறு

இவ்வாறு ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் தவிர மற்றெல்லா அகரவீற்றுப் பெயரெச்சத்தின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(10) அஃறிணைப் பன்மை முன்

வந்தன + குதிரை = வந்தன குதிரை
பாடின + குயில் = பாடின குயில்
சென்றன + பறவைகள் = சென்றன பறவைகள்

இவ்வாறு அஃறிணைப் பன்மை முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(11) செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் முன்

காணிய + சென்றுன் = காணிய சென்றுன்

இவ்வாறு செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(12) சில, பல என்பவற்றின் முன்

சில+தந்தான்=சில தந்தான்
சில+கற்றார்=சில கற்றார்
பல+கொற்றவர்=பல கொற்றவர்
பல+புலிகள்=பல புலிகள்

இவ்வாறு பல, சில என்பவற்றின் முன் அவையே வராமல் வல்லினம் வந்தால் இயல்பாகும்.

(13) 'அம்ம' என்னும் இடைச்சொல் முன்

அம்ம+கொற்ற=அம்ம கொற்ற
அம்ம+சாத்த=அம்ம சாத்த

இவ்வாறு அம்ம என்னும் இடைச் சொல்லின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(14) அது, இது, எது முன்

அது+பெரிது=அது பெரிது
இது+சிறிது=இது சிறிது
எது+போனது=எது போனது
யாது+சிறிது=யாது சிறிது
ஏது+பெரிது=ஏது பெரிது

இவ்வாறு அது, இது, எது, யாது, ஏது, அவை, இவை, எவை, யாவை, இத்தனை, அத்தனை, எத்தனை, எவ்வளவு, அவ்வளவு, இவ்வளவு, சிறு எனும் சொற்களின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(15) ஆ, மா முன்

ஆ+பெரிது=ஆ பெரிது
மா+சிறிது=மா சிறிது

கேண்மியா + கொற்ரு = கேண்மியா கொற்ரு
உண்ணு + குதிரைகள் = உண்ணு குதிரைகள்

இவ்வாறு ஆ, மா என்பவற்றின் முன்னும் கேண்மியா என்பதிலுள்ள மியா என்னும் முன்னிலை அசைச் சொல்லாகிய இடைச் சொல்லின் முன்னும், ஆகாரவீற்று அஃறிணைப் பன்மை எதிர்மறை வினை முற்றின் முன்னும் வரும் வல்லினம் இயல்பாகும்.

(16) புலி + சிறிது = புலி சிறிது
யானை + பெரிது = யானை பெரிது } எழுவாய்த் தொடரிலும்

தம்பீ + போ = தம்பீ போ
அண்ணு + கொடு = அண்ணு கொடு } விளித் தொடரிலும்

இடி + சுவர் = இடி சுவர்
தோய் + தயிர் = தோய் தயிர்
அலை + கடல் = அலை கடல் } வினைத் தொகையிலும்

கவச + குண்டலம் = கவச குண்டலம்
செடி + கொடி = செடி கொடி } உம்மைத் தொகையிலும்

வரும் வல்லினம் இயல்பாகும்.

(17) குற்றியலுகர முற்றியலுகரங்களின் முன்

மாடு + பாய்ந்தது = மாடு பாய்ந்தது
எஃகு + கடிது = எஃகு கடிது
வரகு + சிறிது = வரகு சிறிது
வந்து + தந்தான் = வந்து தந்தான்
எய்து + பொருள் = எய்து பொருள்

என வன்தொடர் தவிர மற்றக் குற்றியலுகரத்தின் முன்வரும் வல்லினம் இயல்பாகும். (மென் தொடரில் அல் வழியில் மட்டும்.)

(18) இரவு+கழிந்தது = இரவு கழிந்தது.
உறவு+போனது = உறவு போனது.

இவ்வாறு முற்றியலுகரச் சொற்களின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

(19) மார்பு+கடுமை = மார்பு கடுமை
எஃகு+சிறுமை = எஃகு சிறுமை
மாது+கற்பு = மாது கற்பு
வரகு+கதிர் = வரகு கதிர்



இவ்வாறு இடைத் தொடர், ஆய்தத் தொடர், ஒற்றிடை மிகாத நெடிற்றொடர், உயிர்த் தொடர்க் குற்றுகரங்களின் முன் வரும் வல்லினம் வேற்றுமை யில் இயல்பாகும்.

(20) எண்ணுப் பெயர்களின் முன்

இரண்டு+பேர் = இரண்டு பேர்
இரு+குதிரை = இரு குதிரை

இவ்வாறு வரும் எண்ணுப் பெயர்களின் முன் வரும் வல்லினம் இயல்பாகும்.

## வினாக்கள்

1. மொழிக்கு முதலில் வரும் வல்லெழுத்துக்கள் யாவை?
2. வல்லினம் மிகும் இடங்கள் மூன்றைக் கூறு.
3. அந்த, இங்கு எங்கு, செப்பு, நிலா, செல்லா—இவற்றின் வல்லினம் எவ்வாறு புணரும்?
4. வல்லினம் மிகாத இடங்கள் சில கூறு.
5. இரண்டாம் வேற்றுமைத் தொகை, இரண்டாம் வேற்றுமை விரி இவற்றின் முன் வரும் வல்லினம் எவ்வாறு புணரும்? உதாரணத்துடன் விளக்கு.
6. அப்படி, யா, தயிர், பத்து, பொருள், நீர்---இவற்றின் முன் வரும் வல்லினம் எவ்வாறு புணரும்?

